# அமுது

## தமிழ்

## நான்காம் வகுப்பு


தமிழ்நாடு அரசு
இலவசப் பாடநூல் வழங்கும்
திட்டத்தின் கீழ் வெளியிடப்பட்டது
(விற்பனைக்கு அன்று)


தீண்டாமை ஒரு பாவச்செயல்
தீண்டாமை ஒரு பெருங்குற்றம்
தீண்டாமை மனிதத்தன்மையற்ற செயல்




தமிழ்நாட்டுப்
பாடநூல் கழகம்.
கல்லூரிச் சாலை, சென்னை - 600 006.

திருத்திய பதிப்பு - 1999
மறுபதிப்பு - **2007**

**நூலாசிரியர்கள்**

1. **க. உமாதேவி**
ஊ.ஒ. தொடக்கப் பள்ளி
குரும்பபாளையம், கோவை மாவட்டம்
2. **பி. மரிய செபாஸ்டியன்**
அரசு தொடக்கப் பள்ளி
கடியபட்டினம், கன்னியாகுமரி மாவட்டம்
3. **கே. சேஷாத்திரி**
ஊ.ஒ. தொடக்கப்பள்ளி
நல்லூர், கரூர் மாவட்டம்
4. **பா. மோகன கிருஷ்ணன்**
எஸ்.எம்.டி. இந்து தொடக்கப் பள்ளி
பூங்கா நகர், சென்னை
5. **அ. கருப்பையா**
ஊ.ஒ. நடுநிலைப் பள்ளி
கொத்தக் கோட்டை,
புதுக்கோட்டை மாவட்டம்
6. **ஜி. தனபால்**
ஊ.ஒ. நடுநிலைப் பள்ளி
அரடாப்பட்டு,
திருவண்ணாமலை மாவட்டம்
7. **ஆர். ஜவஹர்லால் நேரு**
ஊ.ஒ. தொடக்கப் பள்ளி
தூதை சிவகங்கை மாவட்டம்
8. **கா.பி. சுப்ரமணியன்**
நிதி உதவித் தொடக்கப் பள்ளி
தாசர்புரம், விழுப்புரம் மாவட்டம்
9. **கு. ஜோதிலிங்கம்**
ஒன்றியப் பயிற்சி மையம்
கீழ்பெண்ணாத்தூர்,
திருவண்ணாமலை மாவட்டம்
10. **வே. சுவாமிநாதன்**
ஊ.ஒ. நடுநிலைப் பள்ளி
பாபநாசம், தஞ்சாவூர் மாவட்டம்
11. **ஓவியர்கள்**
**கலா பாலு முத்துப்பாண்டி**

**மாநில வளக்குழு உறுப்பினர்கள்**

1. **வி. இரமணி**
முதுநிலை விரிவுரையாளர்
மாவட்டக் கல்வி பயிற்சி நிறுவனம்
மஞ்சூர், இராமநாதபுரம் மாவட்டம்
2. **சு. சிவப்பிரகாசம்**
விரிவுரையாளர்
மாவட்டக் கல்வி பயிற்சி நிறுவனம்
நாமக்கல்
3. **வி. ஆர். நாராயணசாமி**
விரிவுரையாளர்
மாவட்டக் கல்வி பயிற்சி நிறுவனம்
தே. கல்லுப்பட்டி, மதுரை மாவட்டம்
4. **வி. புஷ்பவல்லி**
விரிவுரையாளர்
மாவட்டக் கல்வி பயிற்சி நிறுவனம்
பெருந்துறை, ஈரோடு மாவட்டம்

பாடங்கள் தயாரிப்பு : **தமிழ்நாடு அரசுக்காக**
**மாவட்டத் தொடக்கக் கல்வித் திட்டம்** (தமிழ்நாடு)

இந்நூல் 60 ஜி.எஸ்.எம். தாளில் அச்சிடப்பட்டுள்ளது.

ஆப்செட் முறையில் அச்சிட்டோர்:
கிரவுன் பிரிண்டோகிராப்ஸ், சிவகாசி. - 626189.

# தேசிய கீதம்

ஜன கண மன அதிநாயக ஜய ஹே
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
திராவிட உத்கல பங்கா
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதி தரங்கா
தவ சுப நாமே ஜாகே
தவ சுப ஆசிஸ மாகே
காஹே தவ ஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜய ஹே
பாரத பாக்ய விதாதா
ஜய ஹே ஜய ஹே ஜய ஹே
ஜய ஜய ஜய ஜய ஹே !

*– மகாகவி இரவீந்திரநாத தாகூர்*

# நாட்டுப் பண் — பொருள்

இந்தியத் தாயே! மக்களின் இன்ப துன்பங்களைக் கணிக்கின்ற நீயே எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செய்கின்றாய்,

நின் திருப்பெயர் பஞ்சாபையும், சிந்துவையும், கூர்ச்சரத்தையும், மராட்டியத்தையும், திராவிடத்தையும், ஒரிசாவையும், வங்காளத்தையும் உள்ளக் கிளர்ச்சி அடையச் செய்கிறது.

நின் திருப்பெயர் விந்திய, இமயமலைத் தொடர்களில் எதிரொலிக்கிறது; யமுனை, கங்கை ஆறுகளின் இன்னொலியில் ஒன்றுகிறது; இந்தியக் கடலலைகளால் வணங்கப்படுகிறது.

அவை நின்னருளை வேண்டுகின்றன; நின் புகழைப் பரவுகின்றன. இந்தியாவின் இன்ப துன்பங்களைக் கணிக்கின்ற தாயே! உனக்கு

வெற்றி! வெற்றி! வெற்றி!

# தேசியப் பாடல்

வந்தே மாதரம்!
ஸுஜலாம், ஸுபலாம் மலயஜ ஸுதலாம்
ஸஸ்ய ஸ்யாமலாம் மாதரம்

ஸுப்ர ஜ்யோத்ஸ்நா புலகித யாமிநீம்
புல்ல குஸுமித த்ரும் தள ஸோபிநீம்

ஸுஹாஸிநீம், ஸுமதுர பாஷிநீம்
ஸுகதாம், வரதாம், மாதரம்!
வந்தே மாதரம்!
வந்தே மாதரம்!

*– பங்கிம் சந்திர சாட்டர்ஜி*

# உறுதிமொழி

'இந்தியா எனது நாடு. இந்தியர் அனைவரும் எனது உடன் பிறந்தவர்கள்

என் நாட்டை நான் பெரிதும் நேசிக்கிறேன். இந்நாட்டின் பழம்பெருமைக்காகவும் பன்முக மரபுச் சிறப்பிற்காகவும் நான் பெருமிதம் அடைகிறேன். இந்நாட்டின் பெருமைக்குத் தகுந்து விளங்கிட என்றும் பாடுபடுவேன்.

என்னுடைய பெற்றோர், ஆசிரியர்கள் எனக்கு வயதில் மூத்தோர் அனைவரையும் மதிப்பேன். எல்லாரிடமும் அன்பும் மரியாதையும் காட்டுவேன். என் நாட்டிற்கும் என் மக்களுக்கும் உழைத்திட முனைந்து நிற்பேன். அவர்கள் நலமும் வளமும் பெறுவதிலேதான் என்றும் மகிழ்ச்சி காண்பேன்'.

## தேசிய ஒருமைப்பாட்டு உறுதிமொழி

நாட்டின் உரிமை வாழ்வையும் ஒருமைப்பாட்டையும் பேணிக்காத்து வலுப்படுத்தச் செயற்படுவேன் என்று உளமார நான் உறுதி கூறுகிறேன்.

ஒருபோதும் வன்முறையை நாடேன் என்றும், சமயம், மொழி வட்டாரம் முதலியவை காரணமாக எழும் வேறுபாடுகளுக்கும் பூசல்களுக்கும் ஏனைய அரசியல் பொருளாதாரக் குறைபாடுகளுக்கும் அமைதி நெறியிலும் அரசியல் அமைப்பின் வழியிலும் நின்று தீர்வு காண்பேன் என்றும் நான் மேலும் உறுதியளிக்கிறேன்.

## தமிழ்த்தாய் வாழ்த்து

**நீராரும் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்**
**சீராரும் வதனமெனத் திகழ்பரதக் கண்டமிதில்**
**தெக்கணமும் அதிற்சிறந்த திராவிடநல் திருநாடும்**
**தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறுந் திலகமுமே**
**அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற**
**எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழணங்கே!**
**தமிழணங்கே!**

**உன் சீரிளமைத் திறம் வியந்து**
**செயல் மறந்து வாழ்த்துதுமே!**
**வாழ்த்துதுமே!**
**வாழ்த்துதுமே!**

- மனோன்மணீயம் *பெ. சுந்தரம்பிள்ளை*

## பாரத மாதாவின் முன் மாணவனாகிய/மாணவியாகிய நான் மேற்கொள்ளும் சபதம்

*பெயர் :*

*வகுப்பு :* *பள்ளி :*

நான் ஒரு இந்தியன். சாதி, மத வேறுபாடுகளைக் களைந்து பள்ளிக் கல்வி மூலமாக நான் பெறும் நன்மைகளைத் தாய்த் திருநாட்டின் உயர்வுக்காகப் பயன்படுத்துவேன்.

வந்தே மாதரம்!

*கையொப்பம்*



அன்புக் குழந்தைகளே!

மொழி, மனித இனத்துக்குக் கிடைத்த தலையாய பரிசு.
மொழியில் நாம் பெறும் பயிற்சி நமக்குத்
தன்னம்பிக்கையையும் வலிமையையும் கொடுக்கும்.
மொழியறிவு நம் ஆற்றலையும் ஆளுமையையும்
மேம்படுத்தும்.

மற்ற பாடங்களில் வன்மை பெற மொழிப் பாடமே
வலுவான அடித்தளம் அமைத்துக் கொடுக்கிறது.

தமிழ் மொழியைத் திருத்தமாகப் பேசவும், படிக்கவும்,
எழுதவும் இந்நூல் துணைபுரியும்.

நீங்களே படித்து மகிழ 'நானே படிப்பேன்' எனும் பகுதி
இந்நூலில் அறிமுகம் செய்யப்பட்டுள்ளது.

நினைவிருக்கிறதா?

நிலவைக்காட்டி அன்னையர் உங்களை அமுதூட்டி
வளர்த்தனர்.

நீங்களோ அந்த நிலவைத் தொட்டுவரத் துடிக்கும்
துளிர்கள்.

உங்கள் கையில் உள்ள தமிழ் அமுதை உண்டு
மொழிவலிமை பெற்று வளருங்கள்.



## பொருளடக்கம்





**மனப்பாடப் பகுதி**

செய்யுள் பகுதி முழுவதும்

# 1 சொர்க்கத்தில் நரி



நரி ஒன்று தாகத்தால் தவித்தது.

எங்கும் தண்ணீர் கிடைக்கவில்லை.

என்ன செய்வது...?

தண்ணீரைத் தேடி அலைந்தது. தூரத்தில் கிணறு ஒன்று இருப்பதைப் பார்த்தது; கிணற்றின் அருகே சென்றது, கிணற்றில், கயிற்றின் ஒரு முனையில் வாளி ஒன்று தொங்கிக் கொண்டிருந்தது. அதைக் கண்ட நரி, வாளியில் தாவி ஏறி அமர்ந்தது. உடனே வாளி 'விரி'ரெனக் கிணற்றின் உள்ளே சென்றது. நரி வயிறு நிறையத் தண்ணீரைக் குடித்தது. தாகம் தணிந்தபின் மேலே பார்த்தது. 'எப்படி வெளியேறுவது' என்று யோசிக்கத் தொடங்கியது.

'மேலேயிருந்து யாராவது கயிற்றை இழுத்தால்தானே நாம் மேலே செல்ல முடியும். என்ன செய்வது?'

நேரம் ஆக ஆக நரிக்கு அச்சம் தோன்றியது.

அந்த நேரம் பார்த்துக் கிணற்றின் அருகே ஓநாய் ஒன்று வந்தது. கிணற்றின் உள்ளே எட்டிப் பார்த்தது. அங்கு நரி இருப்பதைக் கண்டது. "அடடா! நரியா! உள்ளே என்ன செய்கிறாய்?," எனக் கேட்டது.

"நான் இப்போது சொர்க்கத்தில் இருக்கிறேன். என்ன அருமையான இடம் தெரியுமா? இங்கு மீன், கோழி, ஆடு எல்லாம் தருகிறார்கள்," என்றது நரி.

ஓநாய் சற்றும் யோசிக்காமல் கயிற்றின் மறுமுனையில் கட்டப் பட்டிருந்த வாளிக்குள் குதித்தது. அந்த வாளி 'சரசர'வென்று கிணற்றின் உள்ளே போயிற்று. அப்போது நரி அமர்ந்திருந்த வாளி மேலே வந்தது.

நரி மேலே வரும்போது பாதி வழியில் ஓநாயைப் பார்த்தது.

"நான் இப்போது சொர்க்கத்திற்கும் மேலான இடத்திற்குப் போகிறேன்," என்று கூறிக்கொண்டே மேலே சென்றது. மேலே வந்ததும் கிணற்றுச் சுவரின் மீது தாவிக் குதித்துத் தப்பியோடியது. பாவம் ஓநாய்...!

ஒரு செயலைச் செய்வதற்கு முன் பல முறை யோசிக்க வேண்டும் அல்லவா?



## பயிற்சிகள்

**அ) விடை தருக:**

1. நரி ஏன் கிணற்றுக்குள் சென்றது?
2. கிணற்றிலிருந்த கயிற்றில் எத்தனை வாளிகள் கட்டப் பட்டிருந்தன?
3. நரியைப் பார்த்து ஓநாய் என்ன கேட்டது?
4. நரி ஓநாயிடம், தான் எங்கு இருப்பதாகக் கூறியது?
5. நரி எப்படிக் கிணற்றிலிருந்து வெளியே வந்தது?

**ஆ) ச, சா, சி... வரிசையில் எழுதுக:**

சில்லறை, செக்கு, சாதனை, சேறு, சோளம், சொர்க்கம், சூரியகாந்தி, சங்கு, சீரகம், சுக்கு.

| | | |
|---|---|---|
| ____________ | ____________ | ____________ |
| ____________ | ____________ | ____________ |
| ____________ | ____________ | ____________ |
| | | ____________ |

**இ) பிரித்து எழுதுக:**

* கிடைக்கவில்லை = ____________
* கட்டப்பட்டிருந்தது = ____________
* மேலேயிருந்து = ____________
* கிணற்றினுள்ளே = ____________
* அமர்ந்திருந்த = ____________
* தப்பியோடியது = ____________

**ஈ) அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக:**



**தவித்தது** - ____________

**தணிந்தது** - ____________

**அச்சம்** - ____________

**உ) படித்துப் பார்:**



***பேரன்*** : தாத்தா! தாத்தா! மண்வெட்டியுடன் எங்கே செல்கிறீர்கள்?

***தாத்தா*** : நம்முடைய தோட்டத்திற்கு.

***பேரன்*** : நானும் வரட்டுமா?

***தாத்தா*** : சரி வா.

***பேரன்*** : தாத்தா, எதற்காகத் தோட்டத்திற்குச் செல்கிறோம்?

***தாத்தா*** : சில மாங்கன்றுகளை நடுவதற்கு.

**விடை தருக:**

1. தாத்தா எங்கே செல்வதாகக் கூறினார்?
2. தாத்தா என்ன கொண்டு சென்றார்?
3. தாத்தாவும் பேரனும் எதற்காகத் தோட்டத்திற்குச் சென்றனர்?
4. தாத்தா என்ன மரக்கன்றுகளை நடப்போவதாகக் கூறினார்?

**தாத்தாவும் பேரனும் தொடர்ந்து பேசினால் என்ன பேசுவார்கள்? உரையாடலைத் தொடருங்கள்.**

## செயல்பாடுகள்



**1. ஆசிரியர் கொடுக்கும் சொற்றொடரைச் சரியாக வரிசைப்படுத்துக.**

**ஆசிரியர்**: எட்டி கிணற்றின் பார்த்தது ஓநாய் உள்ளே

**மாணவர்**: ஓநாய் கிணற்றின் உள்ளே எட்டிப் பார்த்தது.

**ஆசிரியர்**: வெடித்த கன்றுக்குட்டி கேட்டதும் பட்டாசு மிரண்டது சத்தத்தை.

**மாணவர்**: ______________________________

- இதே போல் வரிசை மாறிய சொற்றொடரைக் கூறி, நண்பனை வரிசைப்படுத்தி அமைக்கச் சொல்க.

**2. படித்துப் பார்! வரைந்து பார்!**

- ஒரு சதுரம் வரை.
- சதுரத்தின் நடுவில் அதன் இரு பக்கங்களையும் தொடுமாறு ஒரு நீள் வட்டம் வரை.
- சதுரத்தின் மேல்புறம் உள்ள கோட்டின் நடுவில் உட்புறமாக ஒரு புள்ளி வை.
- புள்ளியைச் சுற்றிச் சிறு வட்டம் ஒன்று வரை.
- புள்ளியிலிருந்து நீள்வட்டத்தின் நடுப்பகுதி வரை நேர்க்கோடு ஒன்று வரை.

நீ வரைந்த படம்· ____________________

**3. நரியைப் பற்றிய கதைகளைச் சேகரித்துப் படி.**

# 2 சட்டை போட்ட குரங்கு



அருமையான சட்டையை
அணிந்து மனிதர் போலவே
குரங்கு காட்டை நோக்கியே
குடு குடென்று சென்றது.

"மனிதன் போல உடையுடன்
வந்தேன்; என்னைப் பாருங்கள்
இனிமேல் என்னைக் குரங்கென
எவரும் கூற முடியுமோ?"



ஆட்டம் ஆடிக் குதிக்கையில்
அங்கே கிளையில் சட்டையும்
மாட்டிக் கொண்டு விட்டது!
வலிந்து குரங்கு இழுத்தது.

இழுத்து இழுத்துப் பார்த்துமே
எடுக்க முடியவில்லையே!
கழுத்து நொந்து போனது:
கர்வம் ஒடுங்க லானது.



“மாட்டிக் கொண்டேன் சட்டையை
மனிதர் போல, ஆதலால்
மாட்டிக் கொண்டு தவிக்கிறேன்
வந்து உதவும், நண்பரே”

— அழ. வள்ளியப்பா



## பயிற்சிகள்

**அ) வரிசைப்படுத்துக:**

- ✸ சட்டையை இழுத்து இழுத்துப் பார்த்துக் கழுத்து வலித்தது.
- ✸ குரங்கு சட்டையை அணிந்துகொண்டு காட்டுக்குச் சென்றது.
- ✸ குரங்கு தன்னைக் காப்பாற்றும்படி நண்பர்களிடம் வேண்டியது.
- ✸ ஆடிக் குதிக்கும்போது சட்டை கிளையில் மாட்டிக் கொண்டது.
- ✸ நண்பர்களிடம் காட்டி மகிழ்ந்தது.



**ஆ) பின்வரும் தலைப்புகளில் இப்பாடலுக்கு நீ என்ன தலைப்பைத் தேர்ந்தெடுப்பாய்? காரணம் கூறுக.**

- ❖ குரங்கின் கர்வம்
- ❖ மரக்கிளையில் குரங்கு
- ❖ குரங்கின் சேட்டை
- ❖ குரங்கின் ஆசை

**இ) விடை தருக:**

1. 'என்னைக் குரங்கென யாரும் கூற முடியாது' என்று குரங்கு சொல்லக் காரணம் என்ன?
2. குரங்கு தவிப்பிற்கு ஆளானது ஏன்?

**ஈ) அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக:**



**அருமை** - ____________________

**வலிந்து** - ____________________

**நொந்து** - ____________________

**அணிந்து** - ____________________

**உ) நிறுத்தற்குறி இடுக:**

- ✻ செல்வி குமார் இருவரும் விளையாடிக் கொண்டிருந்தனர்
- ✻ புளியமரத்தின் மீது கல்லை எறிந்தது யார்
- ✻ ஐயோ அம்மா என்று அலறினாள்



**ஊ) என்ன செய்திருக்கும்?**

குரங்கிற்கு மூக்குக் கண்ணாடியும் செருப்பும் கிடைத்திருந்தால் ..

**ஏ) படித்துப் பார்:**

- ✧ மான் ஒரு காட்டு விலங்கு.
- ✧ இதற்கு அழகிய கொம்புகள் உண்டு.
- ✧ இது மிகவும் வேகமாக ஓடும்.
- ✧ இது தாவரங்களை மட்டுமே உண்ணும்.
- ✧ மான்களில் புள்ளிமான், கலைமான் என்று பலவகை உண்டு.

இதைப்போலவே பின்வரும் விலங்குகளைப் பற்றி விவரித்து எழுதுக.



______________________

______________________

______________________

______________________

______________________

______________________

______________________

______________________

______________________

______________________

______________________



**ஏ) கோடிட்ட இடத்தைப் பொருத்தமாக நிரப்புக:**

- இல்லாமல் __________ முடியாது.
- இல்லாமல் செடி __________ .
- இல்லாமல் வண்டி __________ .
- இல்லாமல் __________ முடியாது.
- இல்லாமல் பறவை _______ முடியாது.

## செயல்பாடுகள்



### 1. சொல் உருவாக்குவோம்

- ஓர் அட்டையில் ஓர் எழுத்து இருக்குமாறு பல அட்டைகளைத் தயார் செய்.
- அட்டைகளை மூன்று பாலிதீன் பையில் போடு.
- அனைவரும் மூன்று குழுக்களாகப் பிரிந்து வட்டமாக அமர்ந்து கொள்ளுங்கள்.
- பையிலிருந்து அட்டைகளை எடுத்துச் சொற்களை உருவாக்குங்கள்.

**2. விலங்குகளைப் பற்றிய பாடல்களைச் சேகரி.**



## பயிற்சிகள்

**அ) வாருங்கள்! படத்தைப் பார்த்துப் பதில் கூறுங்கள்!**

1. படத்தில் உள்ள நிகழ்ச்சிகள் எந்த நேரத்தில் நடைபெறு கின்றன? நீ அதை எப்படித் தெரிந்து கொண்டாய்?
2. படத்தில் உள்ள வீடுகளின் வகைகள் யாவை?
3. படத்தில் இடம் பெற்றுள்ள நகரும் பொருள்கள் யாவை?
4. தலைப்பாகை கட்டியவர்கள் எத்தனை பேர்?
5. கோலம் போடும் பெண்ணின் அருகில் உள்ள வாளியில் நீர் இல்லை. ஏன்?
6. படத்தில் எத்தனை வீடுகளில் கதவுகள் திறந்துள்ளன?
7. படத்தைப் பார்த்து நீயே சில கேள்விகளை எழுதுக.

____________________

____________________

____________________

____________________

**ஆ) இவற்றை எழுதலாமா?**

**1. படத்தில் நடைபெறும் செயல்கள்:**

(எ-டு) நீர் இறைத்தல்

__________

__________

__________

__________

__________

2. **இப்படத்தில் 'க' எனும் எழுத்தில் ஆரம்பிக்கும் பொருள்களின் பெயர்கள்:**

_______________ , _______________.

_______________ , _______________.

3. **படத்தில் காணப்படும் வாகனங்கள்:**

_______________ , _______________.

**இ) உன்னைச் சுற்றி...**

1. படத்தில் காண்பவற்றில் எவை உன் வீட்டிற்கு அருகில் உள்ளன?
2. காலை நேரத்தில் நீ கேட்கும் ஒலிகள் யாவை?
3. நீ நாள்தோறும் காண்பவற்றில் எவை இப்படத்தில் இடம் பெறவில்லை?
4. உன் தெருவில் உள்ள வீடுகளின் வகைகளையும் அவற்றின் எண்ணிக்கையையும் எழுதுக.

| **வீடுகளின் வகைகள்** | **எண்ணிக்கை** |
|---|---|
| _______________ | _______________ |
| _______________ | _______________ |
| _______________ | _______________ |
| _______________ | _______________ |

**ஈ) அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக:**



**கதிரவன்** - _______________

**வைகறை** - _______________

**துயில்** - _______________

**இல்லம்** - _______________

**உ) நடித்துக் காட்டுக:**

தெருவில் காய்கறி விற்பவர் எவ்வாறு விற்பனை செய்வார்? அவரிடம் நீ எவ்வாறு விலைபேசிக் காய்கறி வாங்குவாய்?

**பால் வாங்குபவர்:** என்ன, இன்னைக்குப் பால் ஓரே தண்ணியா இருக்கு.

**பால் விற்பவர்:** நேத்து மழையில மாடு நல்லா நனைஞ்சிருச்சுங்க



## செயல்பாடுகள்

### 1. கண்ணாமூச்சி

- ✪ நான்கு நான்கு பேராக அமர்ந்து கொள்ளுங்கள்.
- ✪ ஒருவர் கண்களை மூடிக்கொண்டு, சுட்டுவிரலைப் படத்தின் மேல் வைக்கவேண்டும்.
- ✪ படத்தில் எதன் மேல் விரல் உள்ளது என்பதைக் கண்களைத் திறக்காமல் கூறவேண்டும்.
- ✪ தவறாக இருப்பின் எதன் மீது விரல் உள்ளது என்று மற்றவர்கள் கூறவேண்டும்.
- ✪ கண்ணை மூடியிருப்பவர் அதற்கேற்ப விரலை நகர்த்தித் தான் முதலில் குறிப்பிட்ட பொருளின் மீது சரியாக வைக்க வேண்டும்.
- ✪ மூன்று வாய்ப்புகள் மட்டுமே கொடுக்கப்படும்.
- ✪ ஒவ்வொருவரும் இதே போல் செய்யவேண்டும்.

### 2. கேள்வியும் பதிலும்

- ✪ நீ விரும்பும் காட்சி அல்லது நிகழ்ச்சி பற்றிய படங்களைச் சேகரித்துக்கொள்.
- ✪ 4 அல்லது 5 பேர் கொண்ட குழுவில் அமர்ந்துகொள்.
- ✪ உன்னிடம் உள்ள படத்தினை மற்றவர்களிடம் காட்டிச் சில கேள்விகள் கேள்.
- ✪ அவர்களைப் பதில் கூறச் சொல்.

# 4 பார்க்கும் இடமெல்லாம்...



“டேய் சேது, அங்கே பார், முத்துவும் முபாரக்கும் நம்மோட விளையாட வராம கூட்டத்தில் நின்னு வேடிக்கை பார்த்துக்கிட்டு இருக்காங்க. வா, நாமும் போய் பார்க்கலாம்,” என்றான் ஜான்.

இருவரும் வேகமாக ஓடினர். அங்கே ஒருவர் வாளியில் இருந்த பசையை ஒரு தாளின் வெள்ளைப் பக்கத்தில் ‘சர் சர்’ என்று தடவினார். வண்ணப் படப் பகுதி தெரியுமாறு திரைப்படச் சுவரொட்டி ஒன்றைச் சுவரில் ஒட்டினார்.

என்ன திரைப்படம் என்பதைப் பார்த்தவுடன் கூட்டம் கொஞ்சம் கொஞ்சமாகக் கலைந்தது. ஜானும் சேதுவும் கடைவீதிக்குச் சென்றனர்.




‘‘சேது! அதோ, மேலே பார்! அங்கே கட்டியிருக்கின்ற நீளமான துணியில் என்ன எழுதி இருக்கிறது?”

“புத்தகக் கண்காட்சி நடப்பதைப் பற்றி எழுதி இருக்கிறது. இதைப் போன்று பல வகைகளில் விளம்பரம் செய்கிறார்கள். அவை எப்படி எப்படியெல்லாம் உள்ளன? பார்ப்போமா!”

## பயிற்சிகள்

**அ) கோடிட்ட இடங்களை நிரப்புக:**

- ______________ இளம்பிள்ளை வாதத்தைத் தடுக்கும்.
- 7 மாவட்டங்களில் ________________ திட்டம்.
- இலக்கியச் சொற்பொழிவு _____________ விருந்தாகும்.
- இந்தச் சுமை என்பது ________________ சுமையாகும்.

**ஆ) தொலைக்காட்சி, வானொலி போன்றவற்றில் வரும் விளம்பரங்களைப் பேசிக் காட்டுக:**

**இ) சரியான விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக:**

- ✣ ________________ ஆபத்தில் உயிரைக் காக்கும்.
  ( அன்னதானம் / இரத்ததானம் )
- ✣ புகை நமக்கு ________________ (நகை / பகை)
- ✣ அளவான ________________ வளமான வாழ்வு.
  ( குடும்பம் / பள்ளி )

**ஈ) விளம்பரம் செய்யப் பயன்படும் சாதனங்களை எழுதுக.**

________________ ________________

________________ ________________

________________ ________________

**உ) எந்தெந்த இடங்களில் பொருள்களைக் கூவி விற்பனை செய்கிறார்கள்?**

________________ ________________

________________ ________________

| **ஊ) கூவி விற்கும் பொருள்** | **கூவும் முறை** |
|---|---|
| (எ-டு) கீரை | கீரையோ கீரை... தண்டுக் கீரை, அரைக்கீரை... |
| ____________ | ________________________ |
| ____________ | ________________________ |
| ____________ | ________________________ |



ஏ) **யார்? எது?**



- கலா பாடினாள்.
- அப்பா படித்தார்.
- மான் துள்ளியது.
- தாத்தா இருமினார்.
- சேவல் கூவியது.
- தேன்மொழி விளையாடினாள்.
- மீன் நீந்தியது.
- எறும்பு ஊர்ந்தது.



1. படித்தவர் யார்? ______________
2. விளையாடியவர் யார்? ______________
3. எது நீந்தியது? ______________
4. ஊர்ந்தது எது? ______________
5. இருமியவர் யார்? ______________
6. ______________ ? ______________
7. ______________ ? ______________
8. ______________ ? ______________

## செயல்பாடுகள்



**1. இவை உன்னுடைய கடையாக இருந்தால் நீ எவ்வாறு விளம்பரம் செய்வாய்?**

தேநீர்க் கடை துணிக் கடை பொம்மைக் கடை

**2. நீ பார்த்த விளம்பர வாசகங்களை எழுதுக.**

# 5 பொழுது விடிவது பாராலே?

பொழுது விடிந்தது. ஆனால் சேவலின் "கொக்கரக்கோ" ஒலி கேட்கவில்லை. காகமும் கரையவில்லை. மழைக் காலமானதால் சூரியன் உதித்ததும் தெரியவில்லை.

நகரத்திற்குச் சென்றிருந்த நம்பி ஊருக்குள் வந்து கொண்டிருந்தார். எதிரே வந்த பழநியைப் பார்த்தார். "என்ன பழநி, மணி எட்டு ஆகப் போகிறதே! வயலுக்குச் செல்லும் நேரமா இது?,"என்றார் நம்பி.

"இன்று பொழுது விடிந்ததே தெரியவில்லை. வீட்டில் கடிகாரமும் இல்லை. நான் மட்டுமா! ஊருக்குள் சென்று பார்! ஊரே உறங்கிக் கொண்டிருக்கிறது!" என்றார் பழநி. இவர்களின் பேச்சை ஆலமரக் கிளையில் அமர்ந்திருந்த காகம் கேட்டது. அதற்கு ஒரே மகிழ்ச்சி! அங்கு வந்த கிளி, "காக்கா அண்ணே! காக்கா அண்ணே! நீங்கள் போட்ட திட்டம் நன்றாகவே நிறைவேறி விட்டது." என்று கூறியது. அப்போது நாய் ஒன்று வாயில் எலும்புத் துண்டைக் கவ்விக்கொண்டு அங்கே வந்தது. காகத்தைப் பார்த்து 'லொள்! லொள்!' எனக் குரைத்தது.



எலும்புத் துண்டு கீழே விழுந்தது. காகம் அதை எடுக்க நினைத்துக் 'கா! கா!' என்று கரைந்தது.

அப்போது, சூரியனை மறைத்திருந்த மேகம் விலகியது. காகத்தின் குரல் கேட்டுத்தான் சூரியன் உதித்தது என்று எண்ணி அங்கிருந்த சேவல் கோபம் கொண்டது. காகத்துடன் சண்டை போடத் தொடங்கியது.

இதை ஆலமரம் பார்த்தது. "ஏன் இவ்வாறு சண்டை போடுகிறீர்கள்?," என்று கேட்டது.

அதற்குச் சேவல், "நான் ஒருநாள் காகத்தைச் சந்தித்தேன். மனிதர்கள் நம்மைக் கொன்று வருகிறார்கள். இதைத் தடுக்க ஒரு வழி சொல் என்று கேட்டேன். உடனே காகம், 'சேவலே! நாம் ஓர் ஒப்பந்தம் செய்து கொள்வோம். நீ காலையில் கூவாதே! நானும் கரையமாட்டேன். அதனால் பொழுது விடியாது. மனிதர்கள் நன்றாகத் திண்டாடட்டும்' என்று கூறியது.

ஆனால் இப்போது காகமே ஒப்பந்தத்தை மீறிக் கரைந்துவிட்டது," என்று ஆலமரத்திடம் முறையிட்டது.

இதைக் கேட்ட ஆலமரம் சத்தம் போட்டுச் சிரித்தது. ஒரு நல்ல தீர்ப்பு வழங்கி சண்டையைத் தீர்த்து வைத்தது.

**ஆலமரம் என்ன தீர்ப்பு வழங்கியிருக்கும்?**



## பயிற்சிகள்

### அ) கோடிட்ட இடங்களை நிரப்புக:

- ____________ வயலுக்குச் சென்றார்.
- பொழுது ____________ தெரியவில்லை.
- 'பொழுது விடியாமல் __________ நன்றாகத் தின்டாட்டும்,' என்று காகமும் சேவலும் ________ செய்துகொண்டன.
- நாய் ஒன்று வாயில் ________ கவ்விக் கொண்டு வந்தது.
- ____________ முதலில் ஒப்பந்தத்தை மீறியது.
- "ஏன் இவ்வாறு சண்டையிடுகிறீர்கள்?" என்று ____________ கேட்டது.

### ஆ) சொற்றொடர் அமைக்கலாமே!



| | | |
|---|---|---|
| பசு | காட்டிற்குள் | மேய்ந்தது |
| நரி | பரிசு | இயற்றினார் |
| மேகம் | புல் | பெற்றாள் |
| கலா | திருக்குறளை | தந்தது |
| திருவள்ளுவர் | மழையைத் | சென்றது |



### இ) பிரித்தெழுதுக:

* மழைக்காலமானதால் = ____________________
* அமர்ந்திருந்த = ____________________
* வழங்கியிருக்கும் = ____________________

### ஈ) நிறுத்தற்குறியிடுக:



என் உடல் ஏழு நிறங்களால் ஆனது ஊதா கருநீலம் நீலம் பச்சை மஞ்சள் இளஞ்சிவப்பு என்ற வரிசையில் நிறங்கள் அமைந்திருக்கும் எனது பெயரின் முன்பகுதிஎன் இருப்பிடம் பின்பகுதி என் வடிவம் என் பெயரைக் கண்டுபிடித்துவிட்டாயா

உ) அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக:



உதயம் - ____________

தீர்ப்பு - ____________

ஒப்பந்தம் - ____________

திண்டாட்டம் - ____________

உறக்கம் - ____________

ஊ) கதை எழுதுக. தலைப்புத் தருக:



இரண்டு ஆடுகள் - முட்டி விளையாடுதல் - நரி ஒன்று பார்த்தல் - ஆடுகளின் தலையில் இரத்தம் வழிதல் - சிறிது விலகி நிற்றல் - நரி நாக்கில் நீர் சுரத்தல் - ஆடுகளுக்கு இடையில் செல்லல் - இரத்தத்தைச் சுவைத்தல் - ஆடுகள் மீண்டும் முட்டிக் கொள்ளல் - நரி நடுவில் மாட்டிக் கொள்ளல்.



## செயல்பாடுகள்



1. சொல்லுங்கள் பார்க்கலாம்!

- இன்று பள்ளிக்கு வரும் வழியில் கண்ட ஒரு நிகழ்ச்சியை வகுப்பு நண்பர்களிடம் கூறுக.
- ஒருவர் சொன்ன நிகழ்ச்சியை, இன்னொருவர் அப்படியே சொல்ல முடியுமா? எங்கே, சொல்லுங்கள் பார்க்கலாம்!

2. சிறுவர் இதழ்களிலிருந்து விலங்குகள், பறவைகள் பற்றிய கதைகளைப் படித்துத் தெரிந்து கொள்க.

3. ஆலமரத்தின் படம் வரைந்து வண்ணம் தீட்டுக.

# 6 முரசு



வெள்ளை நிறத்தொரு பூனை - எங்கள்
வீட்டில் வளருது கண்டீர்;

பிள்ளைகள் பெற்றதப் பூனை - அவை
பேருக் கொருநிற மாகும்

சாம்பல் நிறமொரு குட்டி - கருஞ்
சாந்து நிறமொரு குட்டி.

பாம்பு நிறமொரு குட்டி - வெள்ளைப்
பாலின் நிறமொரு குட்டி.





எந்த நிறமிருந் தாலும் - அவை
யாவும் ஒரேதர மன்றோ?

இந்த நிறம்சிறி தென்றும் - இஃது
ஏற்றமென் றுஞ்சொல்ல லாமோ?

ஒன்றென்று கொட்டு முரசே - அன்பில்
ஓங்கென்று கொட்டு முரசே

நன்றென்று கொட்டு முரசே - இந்த
நானில மாந்தருக் கெல்லாம்

**— மகாகவி சி. சுப்பிரமணிய பாரதியார்**





## பயிற்சிகள்

**அ) கோடிட்ட இடங்களை நிரப்புக:**

- ✤ தாய்ப் பூனையின் நிறம் __________
- ✤ பூனை ஈன்ற குட்டிகளின் நிறங்கள் ________ ________ ________ ________
- ✤ பூனைக் குட்டிகளிடையே நிறங்களால் உயர்வு _____ இல்லை
- ✤ முரசு போல் ஒலி தரும் இசைக் கருவிகள் __________, __________, __________
- ✤ இப்பாடலில் உங்களுக்குப் பிடித்த வரிகளை எழுதுக.

________________________________________

________________________________________

________________________________________

________________________________________

**ஆ) சேர்த்தெழுதுக:**

- ✻ அ + பூனை = __________________
- ✻ நிறம் + ஒரு = __________________
- ✻ ஓங்கு + என்று = __________________
- ✻ ஏற்றம் + என்றும் = __________________

**இ) முதல் எழுத்தை மாற்றினால் நீ உண்ணலாம்!**

(எ-டு) ஆறு - சோறு

ஆசை - ______________

கடை - ______________

நறுக்கு - ______________

செங்கல் - ______________

ஏரி - ______________

தட்டு - ______________



**ஈ) பிரித்தெழுதுக:**

- ✸ தரமன்றோ = ____________________
- ✸ ஒன்றென்று = ____________________
- ✸ நன்றென்று = ____________________
- ✸ பேருக்கொரு = ____________________

**உ) ஏன்?**

கீழே உள்ள அடைப்புக்குள்ளிருந்து விடையை எடுத்து எழுதுக.

- ✣ ____________________ குழந்தை அழுதது.
- ✣ ____________________ உடல் நடுங்கியது.
- ✣ ____________________ வெள்ளம் வந்தது.
- ✣ ____________________ விலங்குகள் பயந்து ஓடின.

(சிங்கம் முழங்கியதால், குளிர் மிகுந்ததால், சூரியன் மறைந்ததால், பசி எடுத்ததால், பெருமழை பெய்ததால்)

**ஊ) அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக:**



- **தரம்** - ____________________
- **அன்றோ** - ____________________
- **ஏற்றம்** - ____________________
- **நானிலம்** - ____________________
- **மாந்தர்** - ____________________

**ஏ) கட்டங்களைத் தகுந்த வண்ணங்களால் நிரப்புக:**

எலுமிச்சம்பழம் ☐ வானம் ☐

பாகற்காய் ☐ காகம் ☐

தக்காளிப்பழம் ☐



## செயல்பாடுகள்

### 1. பாடி விளையாடுவோம்

- அனைவரும் வட்டமாக நில்லுங்கள்.
- ஒருவர் வட்டத்தினுள் பாடிக்கொண்டே சுற்றிவர வேண்டும்

**பாடல்:** சிவப்பு சிவப்பு சிவப்பு
எந்தப் பொருள் சிவப்பு

- மற்றவர்கள் கைதட்டிக் கொண்டே பின்தொடர்ந்து பாடுங்கள்
- வட்டத்தினுள் நிற்பவர் திடீரென ஒருவரைச் சுட்டிக்காட்ட வேண்டும். அவர் அந்நிறமுடைய பொருளைப் பாடலில் இணைத்துப் பாடவேண்டும்.

**பாடல்:** சிவப்பு சிவப்பு சிவப்பு
*மிளகாய்ப் பழம்* சிவப்பு

- சரியான விடை கூறாதவர் வட்டத்தினுள் சென்று பாடி விளையாட்டைத் தொடர வேண்டும்.

- பச்சை, நீலம் போன்ற நிறங்களையும் பாடலில் கேள்வியாய்க் கேட்கலாம்.

### 2. முரசு செய்வோம்! கொட்டிப் பாடுவோம்!

- ஒரு கொட்டாங்கச்சியை எடுத்துக்கொள்.
- அதன் வாய்ப்பகுதியைப் பாலிதீன் தாளால் மூடி இறுகக் கட்டு.
- குச்சி ஒன்றை எடுத்துக்கொள்.
- பாடலின் வரிகளை முரசு கொட்டிப் பாடு.

### 3. உனக்குத் தெரிந்த நாட்டுப்புறப் பாடலை முரசு கொட்டிப் பாடு.

# 7 வீட்டை எரித்த விளக்கு



| காட்சி 1 | *இடம் :* குருவிக் கூடு. *நேரம் :* முன்னிரவு.<br>*பங்கு பெறுவோர் :* ஆண் குருவி, பெண் குருவி, குருவிக்குஞ்சு. |
|---|---|

**பெண் குருவி :** என்னங்க, எல்லாரும் வெளிச்சத்தில் வாழ்கிறார்கள். நாம் மட்டும் இருட்டில் வாழ்வதா?

**ஆண் குருவி :** எப்பொழுதும் இதையேதான் சொல்கிறாய்! ஏன் சிட்டு, மனிதரைப்போல நாம் வாழ முடியுமா என்ன?

**குருவிக்குஞ்சு :** அப்பா! அப்பா! எப்படியாவது நம்ம கூட்டுக்கு வெளிச்சம் கொண்டுவாப்பா.

**ஆண் குருவி :** ம்.. சரி! தாயும் மகளும் ஏதோ ஆசைப் படுகிறீர்கள், முயற்சி செய்கிறேன்.

| காட்சி 2 | *இடம் :* காடு. *நேரம் :* மாலை.<br>*பங்குபெறுவோர் :* ஆண் குருவி, மைனா. |
|---|---|

**மைனா :** என்ன நண்பா, இன்று உன் முகம் வாடி இருக்கிறதே! என்ன காரணம்?

**ஆண் குருவி :** எங்கள் கூட்டில் வெளிச்சம் இல்லை என்றுதான் கவலை.

**மைனா :** இத்தனை நாள் இருட்டில்தானே இருந்தீர்கள். திடீரென்று ஏன் இந்தக் கவலை?

**ஆண் குருவி :** என் மகள் மிகவும் ஆசைப்படுகிறாள்.

**மைனா :** நண்பா! நான் ஒரு வழி சொல்லட்டுமா?

**ஆண் குருவி :** என்ன வழி? சீக்கிரம் சொல்.

**மைனா** : அதோ! அந்த வேலி ஓரம் பார்!

**ஆண் குருவி** : வேலி ஓரமா! என்ன அது?

**மைனா** : மின்மினிப் பூச்சி, 'பளிச் பளிச்' சென்று மின்னுகிறது பார். அதைக் கொண்டுபோய் உன் கூட்டில் வை.

**ஆண் குருவி** : நன்றி நண்பா!
( ஆண் குருவி மின்மினிப் பூச்சியை எடுத்துக் கொண்டு தன் கூட்டுக்குச் செல்கிறது. )

**காட்சி 3**

| *இடம் :* குருவிக்கூடு. | *நேரம் :* முன்னிரவு. |
|---|---|
| *பங்கு பெறுவோர் :* ஆண் குருவி, பெண் குருவி, குருவிக்குஞ்சு | |

**குருவிக்குஞ்சு** : நாங்க கேட்டபடி விளக்கோட வந்துட்டீங்களே!

**ஆண் குருவி** : இது விளக்கு இல்லை. மின்மினிப் பூச்சி. இது நம் கூட்டிற்கு வெளிச்சத்தைத் தரும்.

( ஆண் குருவி மின்மினிப் பூச்சியைக் கூட்டில் வைக்கிறது. சிறிது நேரம் கழித்து ... )

**பெண் குருவி** : என்னங்க வெளிச்சம் போதுமானதாக இல்லையே! நல்ல விளக்கே கிடைக்கவில்லையா?

**ஆண் குருவி** : நாளை கொண்டுவருகிறேன்.



**காட்சி 4** ஆண்குருவி கூட்டிற்கு வருகிறது.

**குருவிக்குஞ்சு** : அப்பா வந்தாச்சு! அப்பா வந்தாச்சு!

**பெண் குருவி** : ஆகா! அந்த விளக்கை விட இது வெளிச்சமாக இருக்கிறதே!

**குருவிக்குஞ்சு** : அப்பா! சீக்கிரம் கூட்ல வைப்பா.

(குருவி கொள்ளிக்குச்சியைக் கூட்டில் வைக்கிறது)



**நீ அதைப் பார்க்கிறாய். என்ன செய்வாய்?**



## பயிற்சிகள்

அ) விடை தருக:

1. பெண் குருவியும் குருவிக்குஞ்சும் எதற்காகக் கவலைப்பட்டன?
2. ஆண் குருவிக்கு உதவிய பறவை எது?
3. குருவி, தன் கூட்டிற்குக் கொண்டுவந்த விளக்குகள் யாவை?

ஆ) பேச்சு வழக்குச் சொற்களை எழுத்து வழக்குச் சொற்களாக மாற்றி எழுதுக:



| பேச்சு வழக்கு | எழுத்து வழக்கு |
|---|---|
| நாங்க | நாங்கள் |
| விளக்கோட | ______________ |
| வந்துட்டீங்களே | ______________ |
| வந்தாச்சு | ______________ |
| கூட்ல | ______________ |
| வைப்பா | ______________ |



இ) அடைப்புக்குள்ளிருந்து பொருத்தமான விடையை எடுத்து எழுதுக:

- ___________ கலா விழுந்தாள்
- ___________ மான்கள் ஓடின.
- ___________ கமலா மகிழ்ந்தாள்.
- ___________ பயிர்கள் வாடின.
- ___________ விளக்கு அணைந்தது.

(தோழி வந்ததால்
எண்ணெய் தீர்ந்ததால்
நீர் இல்லாததால்
நீலா தள்ளியதால்
புலி துரத்தியதால்
கண்ணீர் வந்ததால்)

ஈ) பிரித்து எழுதுக:

- ❋ மனக்கவலை = ______________________
- ❋ விளக்கொன்று = ______________________
- ❋ கொள்ளிக்குச்சி = ______________________

**உ) என்ன செய்யும்?**



எலிக்குஞ்சு ஒன்று தன் வளைக்கு வெளிச்சம் வேண்டுமென்றால் ... கற்பனை செய்து கூறுக.

**ஊ) அடைப்புக்குள் கொடுக்கப்பட்டுள்ள சொற்களுக்குப் பொருத்தமான எதிர்ச்சொல்லைக் காலியிடத்தில் நிரப்புக:**

- ❖ எங்கள் ஊரில் திருவிழா. எனக்கு மிகவும் __________ (கவலை)
- ❖ சன்னலைத் திறந்ததும் வீட்டிற்குள் __________ வந்தது. (இருட்டு)
- ❖ சூரியனின் __________ தாங்காமல் புழு சுருண்டது. (குளிர்ச்சி)

**எ) அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக:**



**கவலை** - ________________

**வாடி இருக்கிறது** - ________________

**முன்னிரவு** - ________________

**ஏ) உனக்குத் தெரிந்த பறவைகளின் பெயர்களை எழுதுக.**

__________ __________ __________ __________ __________

__________ __________ __________ __________ __________

__________ __________ __________ __________ __________

**இவற்றில் ஒரு பறவையைப் பற்றி ஐந்து சொற்றொடர்கள் எழுதுக.**

.............................................................................................................

.............................................................................................................

.............................................................................................................

.............................................................................................................

.............................................................................................................



# செயல்பாடுகள்

## 1. ஆளுக்கொரு சொற்றொடர் கூறுவோம்! அழகிய கதை படைப்போம்!

- ✪ அனைவரும் வட்டமாக நில்லுங்கள்.
- ✪ ஒருவர் ஒரு சொற்றொடரைச் சொல்லிக் கதையைத் தொடங்க வேண்டும்.
- ✪ அடுத்து உள்ளவர் பொருத்தமான சொற்றொடரைக் கூறிக் கதையைத் தொடர வேண்டும்.
- ✪ இவ்வாறு அனைவரும் கூறி ஒரு முழுக் கதையை உருவாக்குங்கள்.

## 2. கண்டுபிடி!

அம்புக் குறிகள் சொற்கள் அமைந்துள்ள திசையைக் குறிக்கும்.

↘ 1. மணம் மிக்க மலர் ------------------

→ 2. சிலந்திக்கு எத்தனை கால்கள்? -----

↑ 3. பந்தை அடிக்க உதவுவது ----------

↓ 4. பசுவின் உணவு --------------------

↙ 5. மீன் பிடிக்க உதவும் -----------------

← 6. ஒரு தின்பண்டம் -------------------

| | | | | | |
|---|---|---|---|---|---|
| க | டு | டை | ன் | த | பு |
| லி | எ | ட் | டு | பா | ல் |
| கூ | சு | ம | சொ | ட் | தை |
| வ | ட | ம் | ல் | வ | சி |
| ல் | ர் | த | லை | லி | டை |
| ம் | ப | ப் | அ | கு | கை |

**இன்னும் பல சொற்கள் கட்டத்திற்குள் ஒளிந்துள்ளன. கண்டுபிடித்து எழுதுக.**

# நானே படிப்பேன்






**படிப்போம்! சிரிப்போம்!**

*சிறுவன்* : ஒரு முழம் இட்லி தாங்க.
*கடைக்காரர்*: என்ன 'ஒரு முழம் இட்லியா'!
*சிறுவன்* : நீங்க தானே 'பூப் போன்ற இட்லி கிடைக்கும்' என்று எழுதிப் போட்டிருக்கீங்க.

*முள்ளம்பன்றி* : முதுகு அரிக்கிறது. கொஞ்சம் சொறிஞ்சிவிடுறியா?
*குரங்கு* : ? ? !







வாழைப் பழத் தோலுக்கும் சீப்புக்கும் என்ன வித்தியாசம்?

முன்னது காலை வாரிவிடும் பின்னது தலையை வாரிவிடும்.

*மருத்துவர்* : தூங்குவதற்கு மாத்திரை
கொடுத்தேனே, என்ன செய்தீர்கள்?

*நோயாளி* : அடடா, சாப்பிட மறந்துபோய்த்
தூங்கிட்டேன்.





( யானை தலைதெறிக்க ஓடி வருகிறது )

*எறும்பு* : ஏன் இப்படி ஓடி வருகிறாய்?

*யானை* : என்னை ஒரு சிங்கம் துரத்தி
வருகிறது.

*எறும்பு* : என் பின்னால் ஒளிந்துகொள்.

*யானை* : ! !

கிளி : உங்களை நோக்கி
நல்ல காலம்
வந்துகொண்டே ---



# 8 செய்திகள் அறிவோமா!











## பள்ளியில் விளையாட்டு விழா!

**புதுக்கோட்டை - நவ. 20.**

ஆலங்குடி ஊராட்சி ஒன்றிய நடுநிலைப் பள்ளியில் நேற்று விளையாட்டுவிழா சிறப்பாக நடைபெற்றது. மாவட்ட ஆட்சித் தலைவர் தலைமை ஏற்றார்.

50மீ. 100மீ ஓட்டங்கள். நீளம் தாண்டுதல். ஊசிநூல் கோத்தல். கரண்டியில் எலுமிச்சம்பழம் ஏந்தி ஓடுதல். பலூன் உடைத்தல். ரொட்டி கவ்வுதல். சீசாவில் நீர் நிரப்புதல் முதலிய போட்டிகள் நடைபெற்றன.

மாணவர்கள் சாக்கு ஓட்டத்தில் கலந்துகொண்டு ஓடினர். அப்போது அங்கே திரிந்து கொண்டிருந்த நாய் ஒன்று குரைத்துக் கொண்டே அவர்களைத் துரத்தியது.

மாணவர்கள் பயந்து. ஓடுவதை நிறுத்திவிட்டனர். 'நாயும் பந்தயத்தில் கலந்துகொள்ள வந்துவிட்டது' என்று மாணவர்கள் கேலியாகப் பேசிச் சிரித்தனர். மாணவர்கள் சிலர் நாயைப் பள்ளிக்கு வெளியே துரத்தினர். மீண்டும் சாக்கு ஓட்டம் நடைபெற்றது.

போட்டிகளில் வெற்றி பெற்ற மாணவர்களுக்கு மாவட்ட ஆட்சித் தலைவர் பரிசளித்தார்.

நாட்டுப்பண்ணுடன் விழா இனிதே நிறைவுற்றது.

## அரிசியின் மேல் எழுதிச் சாதனை!

**ஜெய்ப்பூர் - நவ. 20.**

ஜெய்ப்பூரைச் சேர்ந்த சுரேந்திர ஆச்சார்யா. ஓர் அரிசியின் மேல் 1314 எழுத்துகளை எழுதியுள்ளார். பல நாடுகள். நகரங்களின் பெயர்கள் அதில் இடம் பெற்றுள்ளன.

மக்களுக்குத் தலைவர்களின் தீபாவளி வாழ்த்துகள்.. பக்கம் 6இல் பார்க்க.

## சென்னையில் மின்னல் ரயில்!

**சென்னை - நவ.20.**

தற்போது பூங்கா நகரிலிருந்து சேப்பாக்கம் வரை பறக்கும் ரயில் ஓடிக்கொண்டிருக்கிறது. காலைநேர நெரிசலைத் தவிர்க்க இந்த ரயில் திட்டம் மாநகர் முழுவதற்கும் விரிவு செய்யப்படும் என இரயில்வே அமைச்சர் நிருபர்களிடம் கூறினார்.









## பயிற்சிகள்

**அ) விடை தருக:**

1. தொடர்வண்டி பாலத்தின் மேல் ஓடும்போது எவ்வாறு சத்தம் கேட்கும்?
2. தொடர்வண்டியின் இறுதிப்பெட்டியில் இருந்து வழி காட்டுபவர் யார்?
3. அவர் என்னென்ன வண்ணக் கொடிகளை வைத்திருப்பார்?
4. இரவில் கொடிக்குப் பதிலாக எதைப் பயன்படுத்துவார்கள்?
5. பொருத்தமான வண்ணத்தைத் தீட்டுக.

வண்டி நிற்க வேண்டும் ---- ◯

புறப்படத் தயாராகலாம் ---- ◯

வண்டி செல்லலாம் ----- ◯

**ஆ) உனக்குத் தெரிந்த விளையாட்டுகளின் பெயர்களை எழுதுக.**

| தனி விளையாட்டுகள் | குழு விளையாட்டுகள் |
|---|---|
| | |

**இ) அடைப்புக்குள் உள்ள சொற்களைப் பொருத்தமான இடத்தில் எழுதுக:**

(திரளாக, வயிறு வலிக்க, நன்றி, வரவேற்று, இனிதே, சாக்கு)

- ✣ மாணவர்கள் குரங்கின் செயலைப் பார்த்து ________ சிரித்தனர்.
- ✣ வீட்டிற்கு வந்திருந்த அனைவரையும் கமலம் ________ அமர வைத்தார்.
- ✣ மணவிழாவிற்கு விருந்தினர் ________ வந்தனர்.
- ✣ உதவி செய்பவருக்கு நாம் ________ கூற வேண்டும்.
- ✣ விழா நிகழ்ச்சிகள் ________ நடைபெற்றன.

**ஈ) பிரித்து எழுதுக:**

- ❋ பரிசளித்தார் = ____________________
- ❋ நிறைவுற்றது = ____________________
- ❋ எழுதியுள்ளார் = ____________________
- ❋ கூட்டநெரிசல் = ____________________

**உ) வேறுபாடுகளை எழுதுக:**





| | யானை | பூனை |
|---|---|---|
| உருவம் | ____________ | ____________ |
| நிறம் | ____________ | ____________ |
| வாழும் இடம் | ____________ | ____________ |
| உணவு | ____________ | ____________ |

**ஊ) அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக:**



- நிருபர் - ____________________
- பந்தயம் - ____________________
- சாக்கு - ____________________
- நெரிசல் - ____________________

**ஏ) கட்டுரை எழுதிப் பழகுக:**

கொடுக்கப்பட்டுள்ள குறிப்புகளைப் பயன்படுத்துக.

கடல் - நீலநிறம் - அலைகள் - என்னே அழகு - ஆழம் - மீன்கள் - திமிங்கலம் - பலவகை உயிரினங்கள் - படகு - கப்பல் - கடல்நீர் உவர்ப்பு - உப்பு - உப்பளம்



## செயல்பாடுகள்

**1. இன்றைய செய்தித்தாளில் வந்துள்ள ஐந்து நிகழ்ச்சிகளை எழுதுக.**



**2. சொல்லக் கேட்டு வரைக!**



- ஒரு நீள் வட்டம் வரை.
- அதன் நடுவில் சிறு புள்ளி ஒன்று வை.
- அப்புள்ளியிலிருந்து கீழ்நோக்கிச் சிறு கோட்டுத் துண்டு ஒன்று வரை. அதன் முடிவில் சிறு வட்டம் ஒன்று வரை.
- நீள் வட்டத்தின் இரு ஓரங்களையும் தொடுமாறு மேல்நோக்கி முக்கோணம் ஒன்று வரை.
- முக்கோணத்தின் உச்சியில் சிறு வட்டம் ஒன்று வரை.

**3. தலைப்புச் செய்திகளை விவரித்து எழுதுக.**

- சாலையில் மான்கள்! போக்குவரத்து தடைப்பட்டது!

**4. செய்தித்தாளில் வந்துள்ள விளையாட்டுப் போட்டிகள் தொடர்பான படங்களைச் சேகரி.**

**தொலைபேசிக் கம்பத்தின் கீழ்**
**புலி காத்திருந்தது!**

மலையூர், டிசம்பர் 8

காட்டின் எல்லையில் இருந்த தொலைபேசி இணைப்புக் கம்பத்தில் பழுது பார்க்கும் வேலை நேற்று நடந்தது. அப்போது அங்கு வந்த புலி ஒன்று நீண்ட நேரம் கம்பத்தின் கீழே நின்று கொண்டிருந்தது.



புலி எதற்காக
டெலிபோன் கம்பத்தின்
கீழே காத்திருந்திருக்கும்..



போன் பண்றதுக்காக!

# 9 பணமிருந்தும் பட்டினி

கிருஷ்ணதேவராயர் நாட்டின் நலன் கருதி, வலிமையான குதிரைப் படையை அமைக்க எண்ணினார். ஆயிரம் குதிரைக் குட்டிகளை வரவழைத்தார். வீட்டுக்கொரு குதிரைக்குட்டியும் பணமும் கொடுத்தார். அவற்றை நல்லமுறையில் வளர்க்க ஆணையிட்டார்.

தெனாலிராமன் தனக்குக் கொடுக்கப்பட்ட குதிரைக் குட்டியை ஓர் அறைக்குள் அடைத்து வைத்தான். உணவு கொடுப்பதற்கு மட்டும் சுவரில் ஒரு துவாரம் அமைத்திருந்தான். அதன் வழியாகக் குதிரைக்குக் காய்ந்த புல்லை மட்டுமே கொடுத்துவந்தான்.

சில மாதங்கள் சென்றன.

தெனாலிராமனைத் தவிர அனைவரும் தங்களது குதிரைகளுடன் அரண்மனைக்கு வந்தனர். குதிரைகள் 'கொழு கொழு' வென இருந்தன. அவற்றைக் கண்ட மன்னர் பெருமகிழ்வு கொண்டார்.



தெனாலிராமனைப் பார்த்து, ''நீ மட்டும் குதிரையை ஏன் அழைத்து வரவில்லை?'' என்று கேட்டார்.

''அரசே! அந்தப் பொல்லாத குதிரையை என்னால் பிடித்து வர இயலவில்லை. குதிரைப்படைத் தலைவரை என்னுடன் அனுப்புங்கள். பிடித்து வருகிறோம்,'' என்று தெனாலி ராமன் கூறினான்.

தெனாலிராமன், குதிரை இருந்த அறையைப் படைத்

தலைவருக்குக் காட்டினான். படைத்தலைவர் துவாரத்தின் வழியே எட்டிப் பார்த்தார். குதிரை அவரது தாடியைக் காய்ந்த புல்லென எண்ணி, வாயால் கவ்வி இழுத்தது.

வலி தாங்க முடியாமல் படைத்தலைவர் அலறினார்.

உடன் வந்திருந்த காவலர்கள் மிகவும் சிரமப்பட்டு அவரைக் குதிரையிடமிருந்து விடுவித்தனர். பிறகு சுவரை இடித்துக் குதிரையை வெளியே கொண்டு வந்தனர்.



எலும்பும் தோலுமாய் இருந்த குதிரையை அரண்மனைக்குக் கொண்டு சென்றனர். குதிரையைக் கண்ட மன்னர் ஆத்திரம் அடைந்தார்.

"குதிரை ஏன் இப்படி உள்ளது?" எனத் தெனாலி ராமனிடம் கேட்டார்.

"மன்னா! காய்ந்த புல்லைத் தின்று வளர்ந்தபோதே இக்குதிரை படைத்தலைவரைப் படாதபாடு படுத்திவிட்டது. நன்றாகத் தீனி போட்டிருந்தால் என்ன ஆகும்?" என்றான் தெனாலிராமன்.

கோபமடைந்த மன்னர், "குதிரையை வளர்க்க உன்னிடம் கொடுத்த பணத்தை என்ன செய்தாய்?" என்று கேட்டார்.

"அரசே! உங்கள் ஆணைக்குப் பயந்து, குடிமக்கள் தங்கள் பணத்தையும் செலவு செய்து குதிரையை வளர்த்தனர். அதனால் குதிரைகள் கொழுகொழுவென வளர்ந்தன. ஆனால் பட்டினி கிடந்ததால் மக்கள் இளைத்துப் போய்விட்டனர்" எனப் பதில் கூறினான்.

தெனாலிராமன் கூறியதைக் கேட்ட கிருஷ்ணதேவராயர் தம் தவற்றை உணர்ந்து வருந்தினார்.



## பயிற்சிகள்

**அ) விடை தருக:**

1. கிருஷ்ண தேவராயர் எதற்காகக் குதிரைக் குட்டிகளை வாங்கினார்?
2. தெனாலிராமன் குதிரையை எவ்வாறு வளர்த்தான்?
3. குதிரையை அரண்மனைக்குக் கொண்டு வராததற்குத் தெனாலிராமன் கூறிய காரணம் என்ன?
4. படைத் தலைவர் ஏன் அலறித்துடித்தார்?
5. தெனாலிராமனின் குதிரை அரசரிடம் முறையிடுவது போல் ஐந்து சொற்றொடர்கள் எழுதுக.
6. இக்கதையை உரையாடலாக மாற்றி எழுதுக.

**ஆ) கோடிட்ட சொல்லுக்கு ஏற்ற எதிர்ச்சொல்லைக் காலியிடத்தில் எழுதுக:**

✣ அறைக்கு <u>வெளியே</u> படைத் தலைவர் இருந்தார்.
அறைக்கு __________ குதிரை இருந்தது.

✣ <u>நல்ல</u> மனிதர்கள் ________ செயல்களைச் செய்ய மாட்டார்கள்.

✣ தெனாலிராமனின் குதிரை <u>இளைத்திருந்தது</u>. மற்ற குதிரைகள் __________

**இ) பிரித்து எழுதுக:**

❋ குதிரைப் படை = ____________________
❋ வரவழைத்தார் = ____________________
❋ வீட்டுக்கொரு = ____________________
❋ ஆணையிட்டார் = ____________________
❋ படைத் தலைவர் = ____________________

**ஈ) சொற்றொடர்கள் எழுதுக:**

கொடுக்கப்பட்டுள்ள சொற்களைப் பயன்படுத்துக.

கண் — மலை — எறும்பு

(எ-டு) மலையைப் பார்த்துக் கொண்டிருந்தபோது கண்ணில் எறும்பு விழுந்தது. மலையில் எறும்பு ஊர்வது கண்ணுக்குத் தெரியாது.

❁ கூரை — குடம் — குருவி ❁ தம்பி — படம் — தரை

**உ) அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக:**



வலிமை - ________

ஆணை - ________

படை - ________

துவாரம் - ________

பொல்லாத - ________

**ஊ) கோடிட்ட இடங்களை நிரப்புக:**

கேட்டுக் கேட்டுக் காது - ________

சிரிச்சுச் சிரிச்சு வயிறு - ________

எழுதி எழுதிக் கை - ________

பாத்துப் பாத்துக் கண் - ________

நடந்து நடந்து கால் - ________

| ஒடிஞ்சு போச்சு |
| --- |
| பூத்துப் போச்சு |
| புளிச்சுப் போச்சு |
| தேஞ்சு போச்சு |
| புண்ணாப் போச்சு |

## செயல்பாடுகள்



### 1. சுக்குக் காப்பி குடிப்போமா!

- ஒரு பாத்திரத்தை எடுத்துக் கழுவு.
- அதில் சுத்தமான நீரை எடுத்துக்கொள்.
- தீ மூட்டி, பாத்திரத்தை அடுப்பின் மேல் வை.
- தேவையான அளவு சுக்கு, மல்லி, பனை வெல்லம் ஆகியவற்றைப் பொடி செய்து வைத்துக்கொள்.
- தண்ணீர் கொதிக்கும்போது பொடி செய்தவற்றைப் போடு.
- நன்றாகக் கொதித்த பின் இறக்கி வடிகட்டு.
- சுவை பார்த்துத் தேவைப்பட்டால் கூடுதலாகப் பனைவெல்லம் சேர். சுக்குக் காப்பி தயார்!

**2. தெனாலிராமன் கதைகளைச் சேகரித்துப் படி.**

# 10 என்ன செய்வேன்?

"தம்பிக்குக் காய்ச்சல். இந்த மருந்தைச் சீக்கிரம் வாங்கி வா!" என்று சொல்லி அம்மா மருந்துச் சீட்டையும் பணத்தையும் தந்தார். நான் அவற்றை வாங்கிக் கொண்டு கடைவீதியை அடைந்தேன்.




அங்கே ...

கண்ணுக்கெட்டிய தொலைவு வரை<br>
வெறிச்சோடிய தெரு,<br>
அடைத்த கடைகள்,<br>
வெயிலோ கொளுத்தியது.

மின் கம்பிகளில் காக்கைகள் அங்குமிங்குமாக அமர்ந்திருந்தன.

பூக்கடை ஓரத்துக் குப்பைக் குவியல்களில் கிழிந்த சட்டையுடன், நாலைந்து சிறுவர்கள் எதையோ தேடிக் கொண்டிருந்தனர். சாக்கடை ஓரமாகத் தெரு நாய் ஒன்று படுத்திருந்தது. பேருந்து ஒன்றைக்கூடக் காணவில்லை. கட்டை வண்டிகள் அங்குமிங்குமாகக் கிடந்தன. தார்ப்பாய் மூடிய சரக்கு வண்டி ஒன்று வேகமாகப் போயிற்று. 'குப்'பென்று புழுதி, புகையாக எங்கும் பரவியது. நான் கண்களைக் கசக்கிக் கொண்டேன்..



நேற்று நான் பார்த்த பரபரப்பான கடைவீதி இன்று இப்படி மாறிவிட்டதே! ஏன்? அதோ! அந்தக் கடையில் மிதிவண்டிகள் வரிசையாக நிறுத்தப்பட்டிருக்குமே. அவை எங்கே? காய்கறிக் கடைகள் விற்பாரும் வாங்குவாரும் இன்றி மூடியிருக்கின்றனவே! அழகாகப் பழங்கள் அடுக்கப்பட்டிருக்கும் பழக்கடையும் மூடிக்கிடக்கின்றதே!

நானும் பாலுவும் மிட்டாய் வாங்கிச் சுவைக்கும் கடையில் இன்று பூட்டுத்தான் தொங்குகின்றது. ஆண்களும் பெண்களும் ஆரவாரம் எழுப்பும் நியாய விலைக் கடையும் திறக்கப்படவில்லையே! தேநீர்க் கடையில் விற்கும் சூடான வடையை வாங்க மக்கள் காலையிலேயே வந்து விடுவார்களே! அவர்களையும் இன்று காணோமே!

பட்டப்பகல் வேளையில் சாலையும் கடைவீதியும் இப்படி இருப்பது அரிது.

ஏன் இந்த நிலை? என்ன செய்வேன்? நான் எப்படி மருந்தை வாங்குவேன்?



## பயிற்சிகள்

**அ) விடை தருக:**

1. சிறுவன் எதற்காகக் கடைவீதிக்குச் சென்றான்?
2. தெரு எப்படியிருந்தது?
3. காக்கைகள் எங்கே இருந்தன?
4. கடை வீதியில் கடைகள் இருந்த நிலையை விளக்குக.

**ஆ) என்ன கடை வைப்பாய்? எப்பொருள்களை விற்பாய்?**

| கடைகள் | விற்கும் பொருள்கள் |
|---|---|
| ✣ பூக்கடை | பூக்கள், பூச்சரம், மாலைகள், பூச்செண்டு |
| ✣ ----------- | ------------------------------------------- |
| ✣ ----------- | ------------------------------------------- |
| ✣ ----------- | ------------------------------------------- |

**இ) அழகிய பூக்கள் நிறைந்த ஒரு தோட்டத்திற்குள் நீ செல்கிறாய். அங்கு நீ காண்பவற்றை வருணித்து எழுதுக.**

**ஈ) வருணனையைத் தொடர்ந்து கூறுக.**

சென்னை சிதம்பரம் விளையாட்டரங்கத்தில் நடைபெறும் கிரிக்கெட் விளையாட்டுப் போட்டி:-

அரங்கம் பார்வையாளர்களால் நிரம்பி வழிகின்றது. இந்திய அணியின் தலைவரும் இலங்கை அணியின் தலைவரும் ஆடுகளத்தின் நடுவில் நின்றுகொண்டு இருக்கிறார்கள். இதோ நடுவர் அவர்களை நோக்கி வருகிறார்.

இலங்கை அணித் தலைவர் 'பூவா தலையா' போடுகிறார்.

ஓ..இந்திய அணியின் தலைவருக்கே முதலில் வாய்ப்பு!!

இந்திய அணித் தலைவர் முதலில் பந்து அடிப்பதாக முடிவு செய்கிறார்.

இலங்கை அணி வீரர்கள் பந்து வீசக் களத்தை நோக்கிச் செல்கிறார்கள் .....

**உ) சொல்லக் கேட்டு நிறுத்தற் குறிகளுடன் எழுதுக.**




✳ தேன்மொழி எங்கே சென்றாள்

✳ தேன்மொழி நெல்லிக்காய் இலந்தைப் பழம் கடலை உருண்டை ஆகியவற்றை வாங்கக் கடைக்குச் சென்றாள்

✳ நெல்லிக்காய் ஒரே புளிப்பு

**ஊ) பிரித்து எழுதுக:**

✳ கண்ணுக்கெட்டிய = ____________________

✳ நாலைந்து = ____________________

✳ அங்குமிங்கும் = ____________________

✳ மூடியிருக்கின்ற = ____________________

**எ) அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக:**



**வெறிச்சோடிய** - ____________________

**புழுதி** - ____________________

**ஆரவாரம்** - ____________________

**அரிது** - ____________________

**ஏ) கதை எழுதுவோம்!**

**கொடுக்கப்பட்ட சொற்களைப் பயன்படுத்துக.**

தம்பி - அம்மா - தேடு - ஓடு - மரம் - கிளி - பாடு

(எ-டு) என் தம்பி விளையாடுவதற்காக வெளியில் சென்றிருந்தான். அம்மா தம்பியைக் கூட்டிவரச் சொன்னார். நான் அவனைத் தேடி ஓடினேன். என் தம்பி ஒரு மரத்தின் கீழே விளையாடிக் கொண்டிருந்தான். அந்த மரக்கிளையில் அமர்ந்திருந்த கிளியைப் பார்த்தேன். கிளியைத் தம்பிக்குக் காட்டினேன். உடனே தம்பி, "பச்சைக் கிளியே வா! வா!," என்று பாடத் தொடங்கினான்.

**இதே சொற்களைக் கொண்டு ஒவ்வொருவரும் ஒரு கதை எழுதுக.**

## ஐ) குறுக்கெழுத்துப் புதிர்

குறிப்புகளைப் பயன்படுத்திக் கட்டங்களை நிரப்புக. அடைப்புக்குள் கொடுக்கப்பட்டுள்ள எண்கள், எழுத்துகளின் எண்ணிக்கையைக் குறிக்கும்.

| 1 |  | ■ | 2 |  |  |
|---|---|---|---|---|---|
|  | ■ | 3 |  |  |  |
|  | ■ | ■ |  | ■ | ■ |
| ■ | 4 |  |  |  |  |
| 5 |  |  |  | ■ | ■ |
| ■ | 6 |  |  |  |  |

### இடமிருந்து வலம் (→)

1. கடலில் சென்று கலக்கும் இதை நதி என்றும் கூறுவர். (2)
2. நீரைத் தேக்கி வைக்க வெட்டி வைத்திருப்பர். (3)
3. இந்தக் கதையை விடை கூறி, விடுவிக்க வேண்டும். (4)
4. இதைச் சுழற்றி விளையாடச் சாட்டைக் கயிறு வேண்டும். (5)
5. திரைப்படத்தைப் போல இதிலும் நடிப்பார்கள். (4)
6. இது ஓர் ஊர். இங்கு அருவிகளும் குரங்குகளும் அதிகம். (5)

### மேலிருந்து கீழ் (↓)

1. பாடலுக்கு ஏற்ப இது இருக்கவேண்டும். (3)
2. வீட்டில் உள்ளவர்கள் அனைவரையும் சேர்த்து இவ்வாறு கூறுகிறோம். (5)
4. இதைச் செலுத்தத் துடுப்புகள் தேவை. (3)

# 11 நண்பனைத் தேடி...


ஒரு பூனையால் அடிக்கடி ஆபத்து ஏற்படுகிறதே! ஒரு வலிமையான நண்பனைத் தேடிப் போவோமா?
சூரியனே! நீ எனக்கு நண்பனாக இருப்பாயா?
நான் மிகவும் வெப்பமானவன் உன்னால் தாங்க முடியாதே!


என்னையே மறைக்கும் மேகத்திடம் போய்க் கேள்
மேகமே! மேகமே! எனக்கு உன்னுடைய நட்பு தேவை
எலியே! நான் அங்கும் இங்கும் அலைபவன். என்னால் முடியாது.


என்னையே அலைக்கழிக்கும் காற்றிடம் போய்க் கேள்!
காற்றே! காற்றே! நீ எனக்கு நண்பன் ஆவாயா? சொல்.
என்னால் ஓரிடத்தில் நிலையாக இருக்க முடியாதே!


அப்படீன்னா.
நான் பூனையிடம்
அகப்பட்டு..
அழாதே! எலியே!
என்னையே தடுத்து
நிறுத்தும் மலையிடம்
போ!
மலையே! மலையே!
நீ எனக்கு நண்பனாக
இருப்பாயா? சொல்!
நீயாவது பூனையிடமிருந்து
என்னைக்
காப்பாற்று!
நண்பனாக இருக்க
விருப்பந்தான். ஆனால்
உன்னோடு ஓடி விளையாட
என்னால் முடியாதே!
என்னையே அரித்துச்
செல்லும் ஆற்றிடம்
போ!
ஆறே! ஆறே!
உன்னிடம் நட்புக் கொள்ள
விரும்புகிறேன்.
நான் உன்னோடு குதித்து
விளையாட வருவேன்.
ஆனால் நீ என்னுள் மூழ்கி
இறந்துவிடுவாயே!






## பயிற்சிகள்

**அ) விடை தருக:**

1. எலி ஏன் வலிமையான நண்பனைத் தேடிச் சென்றது?
2. எலி கேட்ட உதவியை மேகம் மறுக்கக் காரணம் என்ன?
3. மலை எலியிடம் கூறியது யாது?
4. ஆறு எலிக்குக் கூறிய அறிவுரை யாது?

**ஆ) இணையான பொருள் தரும் சொல்லை எழுதுக.**

(எ-டு) தோழன் - நண்பன்

ஆதவன் - ------------------

அறிவாளி - ------------------

தந்தை - ------------------

தாய் - ------------------

ஆறு - ------------------

முகில் - ------------------

**இ) "ந்த" என்ற எழுத்துகள் இடையில் வருமாறு சொற்களை அமைத்து எழுதுக.**

(எ-டு) பந்தம்

---------------- ------------------

---------------- ------------------

---------------- ------------------



**ஈ) வரிசைப்படுத்துக:**

* மேகத்தைவிட வலிமையான காற்றிடம் சென்றது.
* மலையின் அருகே ஓடும் ஆற்றை நாடிச் சென்றது.
* சூரியனைத் தனக்கு நண்பனாகும்படிக் கேட்டது.
* காற்றையே தடுத்து நிறுத்தும் மலையிடம் சென்றது.
* எலி ஒன்று தனக்கு ஒரு நண்பனைத் தேடி அலைந்தது.
* ஆற்றின் அறிவுரைப்படி எலி ஒன்றையே நண்பனாக்கிக் கொண்டது.
* சூரியன் மறுத்ததால் மேகத்திடம் சென்றது.

**உ) கதை எழுதுக.**

**கொடுக்கப்பட்டுள்ள சொற்களைப் பயன்படுத்துக.**

குத்துவிளக்கு - வாங்கு - தெரு - தாங்கு - லட்டு - பேருந்து - தூங்கு.

**ஊ) தொடருங்கள் விவாதத்தை!**

(மாலைநேரம். மாந்தோப்பில் பாலுவும் வேலுவும்.)

**பாலு** : அண்ணா! நாளை ஞாயிற்றுக் கிழமை மாமாவுடன் எங்காவது போக வேண்டும்.

**வேலு** : தம்பி! கடற்கரைக்குச் செல்வோம். நுரைத்து வரும் அலைகளில் காலை நனைத்து விளையாடலாம்.

**பாலு** : இல்லை அண்ணா! பக்கத்து ஊரிலுள்ள அணைக்கட்டுக்குச் செல்லலாம். இப்போது அணையில் நீர் நிறைந்துள்ளது. அணையிலிருந்து தண்ணீர் வெளியேறுவதைப் பார்க்கலாம்.

**வேலு** : இல்லை தம்பி! கடற்கரையில் மணலில் --------------
-----------------------------------------------------

**பாலு** : வேண்டாம் அண்ணா! அணைக்கட்டுக்குப் பக்கத்திலுள்ள பூங்காவில்
-----------------------------------------------------

**ஏ) என்ன?**

- ✣ குழந்தை அழுதது.
- ✣ சோமு ஓடினான்.
- ✣ மேரி ஆடினாள்.
- ✣ ஈ பறந்தது.
- ✣ பாட்டி தும்மினார்.
- ✣ முயல் குதித்தது.
- ✣ புலி உறுமியது.
- ✣ பூனை தூங்கியது.

1. குழந்தை என்ன செய்தது? __________
2. சோமு என்ன செய்தான்? __________
3. பூனை என்ன செய்தது? __________
4. பாட்டி என்ன செய்தார்? __________
5. ஈ என்ன செய்தது? __________
6. ____________________________? __________
7. ____________________________? __________

## செயல்பாடுகள்

படத்தைப் பார்! கதை எழுது!



# 12 வாழ விடு! வாழு! (நாடகம்)

**காட்சி 1**

*காலம் :* விடியற்காலை இடம் : கந்தன் இல்லம்.
*பங்குபெறுவோர் :* கந்தன், கந்தனின் மனைவி வள்ளி.

**கந்தன் :** வள்ளி, நான் விறகு வெட்டக் காட்டுக்குப் போக வேண்டும். சாப்பிட ஏதாவது கொண்டு வா.

**வள்ளி :** இதோ வருகிறேன்.

(வள்ளி கொடுத்த கூழையும் பச்சை மிளகாயையும் சாப்பிட்ட பின் கந்தன் காட்டுக்குச் செல்கிறான்.)

**காட்சி 2**

*காலம் :* காலைப்பொழுது. *இடம் :* காடு.
*பங்குபெறுவோர் :* கந்தன், மாமரம்.

(கந்தன் மரத்தை வெட்டக் கோடரியை ஓங்குகிறான்.)

**மாமரம் :** ஐயா, வெட்டாதீர்கள்! என்னை வெட்டாதீர்கள்!

**கந்தன் :** மரமே! உன்னை வெட்டிக்கொண்டு போகாவிட்டால் என் குடும்பம் பட்டினிதான் கிடக்கவேண்டும். அதனால் உன்னை...



**மாமரம் :** ஐயா, என்னிடமிருந்து விழும் குச்சிகளை எடுத்துச் செல்லுங்களேன்.

**கந்தன் :** குச்சிகளை யார் வாங்குவார்கள்?

**மாமரம் :** உங்கள் தேவைக்கு எங்களை அழிப்பதா? எங்களையும் வாழ விடுங்கள். வாழவிட்டால் தொடர்ந்து பயன் தந்து உதவுவோம் அல்லவா?

**கந்தன் :** அதெல்லாம் முடியாது. உன்னை ...

(மரத்தின் ஒரு பகுதியை வெட்டிக் கொண்டு வீட்டிற்குச் செல்கிறான்.)

**காட்சி 3**

| | |
|---|---|
| *காலம் :* இரவு. | *இடம் :* கந்தன் இல்லம் |
| *பங்குபெறுவோர் :* கந்தன், வள்ளி, கந்தனின் மகன் கண்ணன். | |

**கந்தன்** : வள்ளி, இன்றைக்கு மரம் வெட்டப் போனபோது காட்டில்...

**வள்ளி** : என்னங்க, என்ன நடந்ததுங்க?

**கந்தன்** : ஓர் அதிசயம்! மாமரம் ஒன்று என்னுடன் பேசியது.

**வள்ளி** : என்ன! மரம் பேசியதா? வேடிக்கையா இருக்குதே!

**கண்ணன்** : அப்பா, மரம் என்ன பேசியது?

(கந்தன் காட்டில் நடந்ததை விவரமாகக் கூறினான்)

**கண்ணன்** : பாவம் அந்த மரம்! நீங்கள் வெட்டாமல் வந்திருக்கலாமே!

**கந்தன்** : அந்த மரத்த நெனச்சா பாவமா இருக்குது. மரம் வெட்டுவதை விட்டுவிட்டு வேறு ஏதாவதொரு தொழிலைச் செய்யலாம்.

**வள்ளி** : நீங்களும் உங்க இரக்கமும்... போய் வேலையைப் பாருங்க!

**காட்சி 4**

| | |
|---|---|
| *காலம் :* நள்ளிரவு. | *இரவு :* கந்தன் இல்லம். |
| *பங்குபெறுவோர் :* கந்தன், வள்ளி, கண்ணன். | |

(தூங்கிக் கொண்டிருந்த கந்தன் திடீரென்று 'வெட்டமாட்டேன், வெட்டமாட்டேன்' என்று அலறிக் கொண்டே எழுகிறான். சத்தம் கேட்டு வள்ளியும் கண்ணனும் விழித்துக் கொள்கின்றனர்.)

**வள்ளி** : என்னங்க! தூக்கத்தில் ஏன் கத்தினீங்க?



**கந்தன்** : வள்ளி, நான் அசந்து தூங்கிக் கொண்டிருந்த பொழுது, கனவிலே ஒரு தேவதை மாமர வடிவில் வந்தது. 'உன்னுடைய முன்னோர்கள் எங்களை நட்டுக் குழந்தை போல் வளர்த்தனர். நாங்கள் உங்களுக்கு காயும் கனியும் மருந்தும் தந்து உதவுகிறோம்.

எங்களால் நல்ல மழையும் பொழிகிறது. அப்படிப்பட்ட எங்களை வெட்டி அழித்துவிட்டு, உன் குழந்தைகளுக்கு எதை விட்டுச்செல்லப் பேகிறாய்?' என்று கேட்டது. நான், 'வெட்ட மாட்டேன், வெட்ட மாட்டேன்' என்று சொன்னேன்.

**கண்ணன்:** அப்படியா! இனிமேல் என்ன செய்யப் போகிறீர்கள்?

**கந்தன் :** என்ன செய்யப்போகிறேனா? மரம் வெட்டுவதை விட்டுவிட்டு, மரத்தை நட்டு வளத்தைப் பெருக்குவேன். நாளைக்கு முதல் வேலையாக நாம் மரம் நடுவோம்!



## பயிற்சிகள்

**அ) விடை தருக:**

1. கந்தன் மரம் வெட்ட எங்கே சென்றான்?
2. மாமரம் கந்தனிடம் என்ன கூறியது?
3. மரத்தை வெட்டுவதற்குக் கந்தன் கூறிய காரணம் என்ன?
4. மாமரம், தன்னை வெட்டக் கூடாது என்பதற்காகக் கந்தனிடம் என்ன சொல்லி விவாதித்தது?
5. கந்தன் எவ்வாறு மனம் மாறினான்?
6. தேவதை கனவில் வரவில்லை என்றால் என்ன நேர்ந்திருக்கும்?

**ஆ) பேச்சு வழக்குச் சொற்களை எழுத்து வழக்குச் சொற்களாக மாற்றுக:**

| பேச்சு வழக்கு | | எழுத்து வழக்கு |
|---|---|---|
| வேடிக்கையா | - | ________ |
| நெனச்சா | - | ________ |
| பாருங்க | - | ________ |
| அசந்து | - | ________ |
| இருக்குதே | - | ________ |
| கத்தினீங்க | - | ________ |

**இ) என்ன கேட்பாய்?**

தேவதை உன் கனவில் வந்து "நீ வேண்டியதைக் கேள்" என்று கூறினால் ....

**ஈ) பொருத்தமான சொற்களைக் காலியிடத்தில் நிரப்பிப் படி.**

(எ-டு) மல்லிகா அழகான பூக்களை ஒரு சிறிய கூடையில் கொண்டு வந்தாள்.
என் தம்பி அவளிடமிருந்த கூடையை வேகமாக இழுத்தான்.

ஒரு ____________ மரத்தின் அடியில் ________ அணில் ஒன்று ____________ விளையாடிக் கொண்டிருந்தது. நான் ____________ அதன் அருகில் சென்றேன். என்னைப் பார்த்ததும் அது 'கீச்கீச்' சென்று கத்திக்கொண்டே ____________ ஓடியது.



**உ) பிரித்தெழுதுக:**

* என்னுடன் = ____________________
* வந்திருக்கலாம் = ____________________
* என்னிடமிருந்து = ____________________
* ஏதாவதொரு = ____________________

**ஊ) சொல் கோபுரம்!**

1. ஓரெழுத்துச் சொல்
2. சத்தத்தைக் குறிக்கும் சொல்.
3. சுவரில் ஊர்வது.
4. முதல் தமிழ் மாதம்.
5. மனிதன் சென்று இறங்கிய துணைக்கோள்.
6. வகுப்பறைச் சுவரில் இருப்பது
7 முக்கடல் கூடும் இடம்.



ஏ) அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக:



தீங்கு - ______________

வேடிக்கை - ______________

அதிசயம் - ______________



## செயல்பாடுகள்

### 1. கோடிட்ட இடத்தை நிரப்பிப் படி.



எலி ஒன்று சமையலறையில் 'கருக்', 'கருக்' என்று __________ தின்று கொண்டிருந்தது. பூனை ஒன்று __________ அடியெடுத்து வைத்துச் சமையலறைக்குள் __________ நுழைந்தது. உடனே எலி __________ பின்னால் ஓடி __________ சிறிது நேரம் சென்றது.

எலி பூனையின் பார்வையில் படாமல் __________ மேல் ஏறியது. எலியின் கால் பட்டு __________ கீழே உருண்டது. அதிலிருந்து __________ முழுவதும் ......

✪ **கதையைத் தொடர்ந்து எழுதுக. பொருத்தமான தலைப்புத் தருக.**

### 2. நானே அதிகம் பயன் தருபவன்!

✪ ஒரு மாணவர் தென்னை மரம். இன்னொருவர் வாழை மரம் என்று கொள்க.



தென்னை மரம், தானே அதிகப் பயன் தருபவன் என்றும், வாழை மரம் தானே அதிகப் பயன் தருபவன் என்றும் மாறி மாறி விவாதம் செய்யவும்.

**தென்னை மரம்** : சுவையான இளநீரால் நான் தாகத்தைத் தணிக்கிறேன். உன்னால் மற்றவர்கள் தாகத்தைத் தணிக்க முடியுமா?



**வாழை மரம்** : சுவையான பழங்கள் தந்து என்னால் பசியையே போக்க முடியும். உன்னால் முடியுமா?

**விவாதத்தைத் தொடருங்கள்.**

# நானே பாடுவேன்



**வாடா கண்ணா வா!**

கீரை விதைப்போம் கீரை விதைப்போம்
வாடா கண்ணா வா!
கீரை விதைத்தால் கோழி கிளறும்
போடா வரமாட்டேன்!



கோழி கிளறினால் வேலி போடலாம்
வாடா கண்ணா வா!
வேலியை ஆடு தாண்டிவிடுமே
போடா வரமாட்டேன்!





கீரை விதைப்போம் கீரை விதைப்போம்
    வாடா கண்ணா வா!
கீரை வளரத் தண்ணீர் வேண்டுமே
    போடா வரமாட்டேன்!

கேணி நீரை இறைத்துக் கொள்ளலாம்
    வாடா கண்ணா வா!
கீரை வளர்ந்தபின் என்ன செய்வது?
    போடா வரமாட்டேன்!

கீழைத் தெருவில் விற்று விடலாம்
    வாடா கண்ணா வா!
விற்ற பணத்தை என்ன செய்வது?
    போடா வரமாட்டேன்!

வீணாக்காமல் வங்கியில் சேர்ப்போம்
    வாடா கண்ணா வா!
வீடும் நாடும் வாழ்த்த வாழ்வோம்!
    வா வா அண்ணா வா!



# 13 மணியான பரிசு!



ஈரோடு
21.8.98

அன்புள்ள சாரதா,

நலம், நலமறிய ஆவல்.

சென்ற வாரம் எங்கள் பள்ளியில் விடுதலைப் பொன்விழாக் கொண்டாட்டம் நடைபெற்றது. நாங்கள் அனைவரும் சீருடை அணிந்து சிறப்பாகப் பள்ளி சென்றோம். எங்கே பார்த்தாலும் வண்ண வண்ணத் தோரணங்கள்! வரவேற்புச் சுவரொட்டிகள்!

மாலையில் ஆடல், பாடல், நாடகம் எனப் பற்பல கலைநிகழ்ச்சிகள். ஒரே மகிழ்ச்சியும் கொண்டாட்டமும்தான்.

ஒரு நாடகத்தில் நான் பாரதத் தாயாக நடித்தேன். நமது நாட்டுக் கொடியைக் கையில் ஏந்தி நான் மேடையில் தோன்றினேன். அப்போது என்னைப் புகைப்படம் எடுத்தனர். இத்துடன் அந்தப் புகைப்படத்தை அனுப்பியுள்ளேன்.

பள்ளியில் கையெழுத்துப் போட்டியும் நடந்தது. அப்போட்டியில் எனக்கு முதற்பரிசாகச் சுவர்க் கடிகாரம் கிடைத்தது.

நேற்று இரவு எங்கள் ஊரில் பலத்த காற்றுடன் மழை. எங்கள் வீட்டின் கூரை சாய்ந்து விட்டது. எப்படியோ எல்லாரும் ஆபத்தில்லாமல் தப்பித்து விட்டோம். நல்லவேளை எனக்குப் பரிசாகக் கிடைத்த கடிகாரம் உடையவில்லை.

நீ இங்கே வருவதாகச் சொல்லி இருந்தாயே! எப்பொழுது வருகிறாய்?

அன்புத் தோழி
தேவி.



பெறுநர்
சி. சாரதா,
16, ரவி தெரு,
திருச்சிராப்பள்ளி.
அ.கு.எ. 6 2 1 0 1 7



## பயிற்சிகள்

### அ) விடை தருக:

1. கடிதம் எழுதியவர் யார்?
2. கடிதம் எந்த ஊரிலிருந்து எழுதப்பட்டது?
3. கடிதம் யாருக்கு எழுதப்பட்டது?
4. பொன் விழா என்றால் என்ன?

### ஆ) சேர்த்து எழுதுக:

❇ நாடு + கொடி = ______________________

❇ புகை + படம் = ______________________

❇ கை + எழுத்து = ______________________

### இ) சொற்றொடரை நிறைவு செய்க:

அடைப்புக்குள் கொடுக்கப்பட்டுள்ள சொற்களுக்குப் பொருத்தமான **எதிர்ச் சொல்லை** எழுதுக.

✥ பொம்மை உடைந்ததால் செல்விக்கு ________. (மகிழ்ச்சி)

✥ அவசரத்தில் ________ முடிவை எடுத்துவிட்டேன். (சரியான)

✥ விமானம் என் பார்வையிலிருந்து ________ . (தோன்றியது)

### ஈ) நிரப்புங்கள்! படியுங்கள்!



அடைப்புக்குள் உள்ள சொற்களைப் பயன்படுத்துக.
(பாம்பை, ஓடினான், பொம்மை, பாதையில், குறும்பு, சிலர், குலுங்கிக் குலுங்கி)

கண்ணன் வீட்டுக்குத் திரும்பும் ________ ஒரு ________ கண்டான். உடனே பயந்து ________ சிறிது தூரத்தில் நின்று கொண்டிருந்த சிறுவர்கள் ________ கண்ணன் ஓடியதைப் பார்த்து ________ சிரித்தனர். அப்போதுதான், ________ பாம்பைப் பாதையில் போட்டு அவர்கள் ________ செய்தனர் என்பதைக் கண்ணன் அறிந்து கொண்டான்.

**உ) பிரித்து எழுதுக:**

* ❋ சீருடை = ____________
* ❋ சுவர்க் கடிகாரம் = ____________
* ❋ முதற்பரிசு = ____________
* ❋ நாட்டுத்தந்தை = ____________

**ஊ) சரியான சொற்களால் கட்டங்களை நிரப்புக.**



உடலின் ஓர் உறுப்பு.

எருதைக் குறிக்கும் ஒரு சொல்.

வயலுக்கு மற்றொரு பெயர்.

கடிதத்தை இப்படியும் சொல்வர்.

நதிகள் சென்று சேருமிடம்.

நாம் உடுத்துவது.

தொட்டால் சுடும்.

**எ) அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக.**



**சீருடை** = ____________

**வண்ணம்** = ____________

**சுவரொட்டி** = ____________

**ஏ) வரிசைப்படுத்திப் பொருள் தரும் சொற்றொடராக மாற்றுக:**

* ❁ ஒருமைப்பாட்டு எடுத்தனர் மாணவர்கள் உறுதிமொழி
* ❁ பேசினார் அனைவரையும் வரவேற்று தலைமையாசிரியர்
* ❁ பள்ளியில் பேச்சு நடத்தினர் போட்டி
* ❁ வழங்கினர் முதல்பரிசாக பாரதியார் கவிதைத் தொகுப்பினை எனக்கு

ஐ) உன்னைச் சாரதாவாக எண்ணிக் கொள். தேவியின் கடிதத்திற்குப் பதில் எழுதுக.

ஒ) படிப்போம்: விடை தருவோம்.

பேருந்து திடீரெனக் குலுக்கலுடன் நின்றது. முன்னால் இருந்த இருக்கையின் கம்பியில் முட்டிக் கொண்டேன். “விளையாட வேறு இடமே கிடைக்க வில்லையா?” என்று சிறுவன் ஒருவனைத் திட்டி விட்டு, ஓட்டுநர் வண்டியை ஓட்டத் தொடங்கினார்.

என் அருகில் அமர்ந்திருந்த பாட்டி, “கண்ணாடி கீழே விழுந்துவிட்டது. எடுத்துக் கொடு, பாப்பா” என்றார். எடுத்துக் கொடுத்தேன்.

மழைத்தூறல் விழத் தொடங்கியது. திரையைக் கீழே இழுத்துச் சன்னலை மூடினேன்.

1. பேருந்து திடீரென நின்றது. ஏனெனில் ____________
2. பேருந்து திடீரென நின்றது. எனவே நான் ____________
3. பாட்டியின் கண்ணாடி கீழே விழுந்தது. எனவே ____________
4. சன்னலை மூடினேன். ஏனெனில் ____________



## செயல்பாடுகள்

### 1. எழுதிப் படிப்போம்

- ஒவ்வொருவரும் ஒரு தாளினை எடுத்துக் கொள்ளுங்கள்.
- அதில் எறும்பைப் பற்றி ஐந்து சொற்றொடர்கள் எழுதுங்கள்.
- நீங்கள் எழுதிய தாளினைச் சுழல் முறையில் மாற்றிக் கொள்ளுங்கள்.
- ஒவ்வொருவராக எழுந்து படியுங்கள்.

**2. புள்ளிகளை இணைத்து வண்ணம் தீட்டுக.**



# 14 காண்போம் கன்னியாகுமரி!



உலகம் வியக்கும் உன்னதக் குமரி
நானும் சென்றேனே!
உவகை பொங்க உயரிய காட்சி
நேரில் கண்டேனே!!



விசைப்பட கேறி விரைவாய்ச் சென்று
புதுமை பெற்றேனே!
விநோதம் மிக்க விவேகா னந்தர்
மண்டபம் சென்றேனே!

பகவதி மூக்கில் பளிச்சிடும் மணியைப்
பார்த்து வியந்தேனே!
பலரும் போற்றும் காந்தி மண்டபம்
கண்டு களித்தேனே!





முழங்கும் முக்கடல் முயன்று துதிக்கும்
பாதம் அறிந்தேனே!
முழுமதி செங்கதிர் முறையாய் எதிரெதிர்
பார்த்து வியந்தேனே!

கரையைக் காட்டும் கலங்கரை விளக்கம்
கண்டு களித்தேனே!
கடற்கரைக் காட்சி கடலின் எழுச்சி
நோக்கி நின்றேனே!



வலம்புரிச் சங்கு அருங்கலைப் பொருள்கள்
அழகை ரசித்தேனே!
விரும்பிய பொருள்கள் விலைக்குச் சிற்சில
வாங்கி வந்தேனே!



## பயிற்சிகள்

**அ) விடை தருக:**

1. விவேகானந்தர் மண்டபத்திற்கு எவ்வாறு செல்லலாம்?
2. கப்பலில் செல்வோருக்கு இரவில் கரையைக் காட்டுவது எது?
3. கன்னியாகுமரியில் கதிரவன் காட்சியளிப்பதில் உள்ள சிறப்பு யாது?

**ஆ) பிரித்து எழுதுக:**

* படகேறி = ____________________
* செங்கதிர் = ____________________
* அருங்கலை = ____________________
* சிற்சில = ____________________

## இ) சொல் ஒன்று; பொருள் இரண்டு!

தொடருக்கு எதிரே சரியான பொருளை எடுத்து எழுதுக.

(எ-டு) வானில் மதி ஒளி வீசியது. (சந்திரன்)
கோதை மதி நிறைந்தவள். (அறிவு). (அறிவு/சந்திரன்)

- கரையோரம் படகு நிற்கும் இடம் படகுத் துறை. ( ____________________ )
  நாட்டில் தொழில் துறை வளர வேண்டும். ( ____________ )
  (இடம்/பிரிவு)
- கோயில் மணி ஓசை தெளிவாகக் கேட்டது. ( ____________________ )
  இந்த வேலை அரை மணி நேரத்தில் முடிந்துவிடும்.
  ( ____________________ ) (கால அளவு/கருவி)
- காலையில் காகம் கரையும். ( ____________________ )
  சர்க்கரை நீரில் கரையும். ( ____________________ )
  (கலந்து ஒன்றாகும்/ஒலி எழுப்பும்)
- பள்ளியில் ஒன்றாகக் கூடு. ( ____________________ )
  குருவி கட்டுவது கூடு. ( ____________________ )
  (வசிக்குமிடம்/வந்து சேர்தல்)

## ஈ) மலர் கொய்வோமா!

மலரின் இதழில் உள்ள எழுத்து முதல் எழுத்தாகவும் மலரின் நடுவிலுள்ள எழுத்து இறுதி எழுத்தாகவும் கொண்டு மலர்களின் பெயரை உருவாக்குக.
(எ-டு) பிச்சிப் பூ

______________ ______________
______________ ______________
______________ ______________



**உ) அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக:**



வியப்பு - ____________________

உன்னதம் - ____________________

உவகை - ____________________

விநோதம் - ____________________

செங்கதிர் - ____________________

எழுச்சி - ____________________

அற்புதம் - ____________________

கலம் - ____________________

**ஊ) பொருத்தமான சொற்களை இணைத்துப் புதிய சொற்களை உருவாக்குக.**



| | |
|---|---|
| கட்டு | கண்ணாடி |
| தீ | நட்சத்திரம் |
| மூக்கு | குழந்தை |
| செய்தி | கூடு |
| வால் | தாள் |
| கை | சோறு |
| தேன் | பெட்டி |



**எ) பாடலில் இருந்து எடுத்து எழுதுக:**

| பெயர்ச்சொற்கள் | வினைச்சொற்கள் |
|---|---|
| (எ-டு) உலகம் | பார் |
| ______________ | ______________ |
| ______________ | ______________ |
| ______________ | ______________ |
| ______________ | ______________ |
| ______________ | ______________ |

ஏ) கடலில் கிடைக்கும் பொருள்களின் பெயர்களை எழுதுக.

ஐ) உனக்குத் தெரிந்த சுற்றுலா மையங்களின் பெயர்களை எழுதுக.

ஒ) கண்டுபிடி!

மறைந்திருக்கும் தமிழ்ப் புலவர்களின் பெயர்களை எழுதுக. அவர்கள் எழுதிய நூல்களின் பெயர்களை அறிந்து எழுதுக.

| புலவர்கள் | நூல் |
|---|---|
| ________________ | ________________ |
| ________________ | ________________ |
| ________________ | ________________ |
| ________________ | ________________ |
| ________________ | ________________ |

ள் தி ரு பா ண ப ன் ளு ர ச ம யா க வி தா ண ம் வ ர் ண்

## செயல்பாடு

### இணைத்துக் கூறுவோம்

- தொடர்புடைய பல சொற்றொடர்களைத் தனித்தனி அட்டைகளில் எழுதிக்கொள்ளுங்கள்.

(எ-டு) செருப்பு அணியவில்லை. | காலில் முள் குத்தியது.

குடை இல்லை. | மழையில் நனைந்துவிட்டேன்

- அனைவரும் வட்டமாக அமர்ந்து கொள்ளுங்கள்.
- ஒவ்வொருவரும் ஓர் அட்டையை எடுத்துக் கொள்ளுங்கள்.
- ஒருவர் எழுந்து கையிலுள்ள அட்டையில் எழுதியுள்ளதைப் படியுங்கள்.
- அதனோடு தொடர்புடைய சொற்றொடர் எழுதியுள்ள அட்டையை வைத்துள்ளவர் உடனே எழுந்து படிக்க வேண்டும்.
- மற்றவர்கள் இரண்டு சொற்றொடர்களையும் இணைத்துக் கூறுங்கள்.

(எ-டு) செருப்பு அணியாததால் காலில் முள் குத்தியது.

# 15 மீனாவின் வாழ்வில் ஒரு நாள்...



டிசம்பர் 1998

புதன் 23

இன்று காலையில் பள்ளிக்குச் செல்லும் வழியில் சிறுவர்கள் சிலர், "டேய்! அதோ பார்! அடி! அடி!" என்று கூச்சலிட்டுக் கொண்டிருந்தனர். ஏன் கூச்சல் போடுகிறார்கள் என்று அறிவதற்காக நான் விரைந்து சென்றேன்.

அங்கே, ஓணான் ஒன்று வேலியின் மீது இருந்தது. அது தன் தலையைத் தூக்கி, 'ஒரு திங்கும் செய்யாத என்னை ஏன் துரத்தறீங்க? ஏன் அடிக்கிறீங்க? என்று கேட்பது போல் பார்த்தது.

"டேய்! ஓணான் நம்மை முறைக்குதடா!" என்றான் ஒரு சிறுவன்.

"இந்த முறைப்பெல்லாம் எங்ககிட்டக் காட்டாதே! காட்டினால் என்ன ஆகும் தெரியுமா?" என்றான் மற்றொரு சிறுவன்.

"ஐயோ! பாவம்!" என்றேன் நான். அருகில் நின்ற சிறுவர்கள் என்னை முறைத்துப் பார்த்தனர். நான் அஞ்சாது, "ஏன் அதை அடிக்கிறீங்க? அது உங்களுக்கு என்ன திங்கு செய்தது?" என்று அவர்களைக் கேட்டேன். என் கேள்விக்குப் பதிலேதும் கிடைக்கவில்லை.

அவர்கள் சிறு சிறு கற்களால் ஓணானைக் குறிபார்த்து அடித்தனர். ஒரு சிறுவன் எறிந்த கல் தலையில் பட்டு ஓணான் கீழே விழுந்தது. 'என்னைப் போன்ற அப்பாவிகளுக்கு இதுதான் கதியா?' என்பது போலத் தலையை மேலும் கீழும் ஆட்டியது; துடிதுடித்து மாய்ந்தது.

ஓணானின் அவல முடிவைக் கண்டு எவ்வளவு நேரம் அங்கே நின்றுகொண்டிருந்தேன் என்று எனக்கே தெரியவில்லை.

என் வருத்தம் என்றும் மறையாது.





பயிற்சிகள்

**அ) விடை தருக:**

1. சிறுவர்கள் என்ன செய்து கொண்டிருந்தனர்?
2. சிறுவர்களிடம் மீனா என்ன சொன்னாள்?
3. ஓணான் சிறுவர்களைப் பார்த்தது என்ன சொல்வது போல் இருந்தது?
4. ஓணானுக்கு என்ன நேர்ந்தது?

**ஆ) திருத்தி எழுதுக:**



கொடை - ______________

காத்து - ______________

தலகாணி - ______________

கொடம் - ______________

வெத்தல - ______________

பாடத்தில் வரும் பேச்சு வழக்குச் சொற்களை எடுத்து எழுதித் திருத்துக.



| **பேச்சு** | - | **எழுத்து வழக்கு** |
| --- | --- | --- |
| ______________ | - | ______________ |
| ______________ | - | ______________ |
| ______________ | - | ______________ |
| ______________ | - | ______________ |

**இ) கோடிட்ட சொல்லுக்கு எதிர்ச் சொல்லை வாக்கியத்தில் அமைத்து எழுதுக:**

✣ விமானம் விரைந்து பறந்தது.

நத்தை ______________ ______________

✣ கவிதா புதிய சட்டை அணிந்திருந்தாள்

______________ ______________ ______________ ______________

ஈ) **பிரித்து எழுதுக:**

* கூச்சலிட்டு = ______________
* பதிலேதும் = ______________
* நாட்குறிப்பு = ______________




உ) **நிறுத்தற்குறி இடுக:**

கவிதா தீபா இருவரும் காட்டுக்குச் சென்றனர் அங்கே மா புளி பலா கொன்றை போன்ற பலவகையான மரங்களைக் கண்டனர் கிளிகள் குயில்கள் மயில்கள் மைனாக்கள் போன்ற பலவிதப் பறவைகளையும் கண்டனர் ஆகா என்ன அழகான காட்சி என்று வியந்தனர்

ஊ) **அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக:**



**நாட்குறிப்பு** - ______________
**கூச்சல்** - ______________
**அஞ்சாது** - ______________
**தீங்கு** - ______________
**மாய்ந்தது** - ______________

எ) **'ஏனெனில்' 'எனவே' என்னும் சொற்களை இணைத்து எழுதுக:**



(எ-டு) ஆற்றிலே வெள்ளம் வந்தது. ஏனெனில் மழை பெய்தது.

* காரிருள் மறைந்தது. ( ) கதிரவன் தோன்றியது.
* கமலா பொம்மை வாங்கவில்லை ( ) அவளிடம் பணம் இல்லை.
* புயற்காற்று வீசியது. ( ) மரங்கள் முறிந்து வீழ்ந்தன.
* கலா பள்ளிக்கு வரவில்லை. ( ) அவளுக்கு உடல் நலமில்லை.
* தாத்தாவுக்குப் பற்கள் கிடையாது. ( ) அவரால் முறுக்குத் தின்ன முடியாது.

ஏ) **நேற்று உன் வீட்டில் நடந்த நிகழ்ச்சிகளை நாட்குறிப்பில் எழுதுக:**

ஐ) **கற்பனை செய்து எழுதுக:**

ஓணான் தப்பி ஓடிவிட்டதாக எண்ணிக்கொள். ஓணான் நாட்குறிப்பு எழுதினால் என்ன எழுதி இருக்கும்?



ஒ) **சொற்களை உருவாக்குக:**

வட்டத்தில் உள்ள எழுத்துகளைப் பயன்படுத்துக.

______________ ______________

______________ ______________

______________ ______________

______________ ______________

______________ ______________






## செயல்பாடு

- இரண்டு குழுக்களாகப் பிரிந்துகொள்ளுங்கள்.
- ஒரு குழுவினர் 10 **பெயர்ச் சொற்களை** ஒன்றன்பின் ஒன்றாகக் கூறவேண்டும்.

  (எ-டு) கிளி, மரம், மலை.
- இன்னொரு குழு அச்சொற்களுக்கு ஏற்ற அடைமொழிகளைச் சேர்த்துக் கூறவேண்டும்.
- (எ-டு) **பேசும்** கிளி, **பருத்த** மரம், **உயர்ந்த** மலை.
- பொருத்தமாகக் கூறும் அடைமொழிக்கு ஒரு மதிப்பெண்.
- இப்போது இரண்டாம் குழுவினர் 10 **வினைச் சொற்களை** ஒன்றன்பின் ஒன்றாகக் கூறவேண்டும்.
- (எ-டு) ஓடினான், வரைந்தாள், பேசியது.
- முதற்குழுவினர் அதற்கேற்ப அடைமொழிகளைச் சேர்த்துக் கூறவேண்டும். (எ-டு) **வேகமாக** ஓடினான், தெளிவாக வரைந்தாள், **கொஞ்சிப்** பேசியது.
- அதிக மதிப்பெண் பெற்ற குழுவிற்கு வெற்றி.

# 16 குறிப்பால் அறியலாம்



**வா**ணியும் சோமுவும் மணலில் கிச்சுக் கிச்சுத் தாம்பாளம் விளையாடிக் கொண்டிருந்தனர். தொடர்ந்து வாணியே வெற்றி பெற்றுக் கொண்டிருந்தாள்.

சோமு வாணியை வெற்றிகொள்ள எண்ணினான். "வாணி!, நான் கூறும் விடுகதைக்கு உன்னால் விடை கூறமுடியுமா?" எனக் கேட்டான்.

"ஓ முடியுமே! சொல் பார்க்கலாம்!" என்றாள் வாணி..

"தங்கை விளக்குக் காட்ட,
அண்ணன் மத்தளம் கொட்ட
அம்மா தண்ணீர் தெளிக்கிறாள்.
பதில் சொல், பார்க்கலாம்!" என்றான் சோமு,

அவள் கூறிய விடை ______________________

வாணி இப்போது சோமுவுக்கு எதிர் விடுகதை போட்டாள்.

"கடல் நீரால் வளர்வான்;
மழை நீரால் மடிவான். அவன் யார்?" எனக் கேட்டாள்.

சோமு கூறிய விடை ______________________

தொடர்ந்து இருவரும் மாறி மாறி விடுகதை போட்டு விளையாடினர்.

**நீங்களும் விடுகதை போட்டு விளையாடலாமே!**







நீர் ததும்பி
நிறைந்திருக்கும்.
குளமும் அன்று;
நெற்றியிலே
கண்ணிருக்கும்.
சிவனும் அன்று;
அது என்ன?


வித விதமாய் விற்கும் தலை;
விரும்பி மக்கள் வாங்கும் தலை;
தடவித் தடவி அனுப்பும் தலை;
அந்தத் தலை என்ன தலை?


கண்டு பூப் பூக்கும்.
காணாமல் காய்
காய்க்கும்.
அது என்ன?


வாயிலிருந்து நூல்
எடுப்பான். மந்திரவாதி அல்ல;
எதிரெதிரே தாவுவான்.
குரங்கும் அல்ல;
வலை விரித்துக் காத்திருப்பான்.
வேடனும் அல்ல; அவன் யார்?


நோயில்லை;
நொடியில்லை;
நாளும் மெலிகிறான்.
அவன் யார்?


நான் சென்ற ஊர்.
நான்கு எழுத்து ஊர்.
முதல் எழுத்து நீரில் உண்டு; சீரில் இல்லை.
இரண்டாம் எழுத்து கலத்தில் உண்டு; களத்தில் இல்லை.
மூன்றாம் எழுத்து கிளியில் உண்டு; புளியில் இல்லை
நான்காம் எழுத்து பொரியில் உண்டு.
பொறியில் இல்லை.
நான் சென்ற ஊர் எந்த ஊர்?





## பயிற்சிகள்

**அ) வலப் பக்கத்திலிருந்து படித்தாலும் இடப் பக்கத்திலிருந்து படித்தாலும் ஒரே சொல்லாக வரும் சொற்களை எழுதுக:**

(எ-டு) மாமா

________ ________ ________

**ஆ) கோடிட்ட சொற்களுக்குப் பொருத்தமான எதிர்ச் சொல்லை எழுதுக:**

- பொருளை விற்பவர் கடையின் உள்ளே இருக்கிறார். ________ வெளியே நிற்கிறார்.
- எங்கள் வீட்டில் மூன்று பசுக்கள் உண்டு. உங்கள் வீட்டில் ஒன்று கூட ________
- தொட்டாற் சுருங்கியின் இலை தொட்டவுடன் சுருங்கும். சிறிது நேரம் கழித்தவுடன் ________



**இ) விடையைக் கண்டுபிடி:**

அடைப்புக்குள்ளிருந்து எடுத்து எழுதுக.

1. தோலை உரித்தாலும் அழாத இவன் உரித்தவரைக் கண்ணீர்விட வைப்பான். அவன் யார்? ________
2. புறப்பட்ட இடம் தெரியும்; போய்ச் சேருமிடம் தெரியாது. அது என்ன? ________
3. சின்னஞ்சிறு வீட்டில் சிப்பாய்கள் பல பேர். அவர்கள் யார்? ________
4. வெளியில் விரியும். வீட்டில் சுருங்கும். அது என்ன? ________

(தீக்குச்சிகள், வெங்காயம், குடை, புகை, வாழைப்பழம்)

**ஈ) அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக:**

**கனி** - ________ **மெலிதல்** - ________

**இறைத்தல்** - ________

உ) அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக:



வியப்பு - ____________

உன்னதம் - ____________

உவகை - ____________

விநோதம் - ____________

செங்கதிர் - ____________

எழுச்சி - ____________

அற்புதம் - ____________

கலம் - ____________

ஊ) பொருத்தமான சொற்களை இணைத்துப் புதிய சொற்களை உருவாக்குக.



| | |
|---|---|
| கட்டு | கண்ணாடி |
| தீ | நட்சத்திரம் |
| மூக்கு | குழந்தை |
| செய்தி | கூடு |
| வால் | தாள் |
| கை | சோறு |
| தேன் | பெட்டி |



எ) பாடலில் இருந்து எடுத்து எழுதுக:

| பெயர்ச்சொற்கள் | வினைச்சொற்கள் |
|---|---|
| (எ-டு) உலகம் | பார் |
| ____________ | ____________ |
| ____________ | ____________ |
| ____________ | ____________ |
| ____________ | ____________ |
| ____________ | ____________ |

**ஏ) சொற்றொடர்ப் படிக்கட்டு அமை:**

(எ-டு) முல்லை மலர்

மலர் வாசனை

வாசனைத் தைலம்

தைலப் பெட்டி

பெட்டி படுக்கை

தேன்சிட்டு

_______ _______

_______ _______

_______ _______

_______ _______

மூக்குக் கண்ணாடி

_______ _______

_______ _______

_______ _______

_______ _______



## செயல்பாடுகள்

**1. விடுகதை உருவாக்கி விளையாடு!**

- ஏதேனும் ஒரு பொருள், பறவை, விலங்கு அல்லது விளையாட்டு பற்றி விடுகதை எழுதுக.
- எழுதியதைப் படித்துக் காட்டுக.
- மற்றவர்கள் அதற்குப் பதில் சொல்ல வேண்டும்.

(எ-டு) கையில் அணிவது (கண்ணாடி வளையல்) கலகல ஓசை தருவது.

**2. சிறுவர் இதழ்களிலுள்ள புதிர்களைச் சேகரித்து எழுதுக:**

# 17 வெற்றுத் திண்ணை

வள்ளியும் அவளுடைய தந்தையும் பேருந்திற்காகக் காத்திருந்தனர். வள்ளி ஆட்டுக்குட்டியைத் தன் கையில் பிடித்திருந்தாள். தேநீர்க் கடை வெளிச்சம் வள்ளி வைத்திருந்த ஆட்டுக்குட்டியின் மீது விழுந்தது.

ஊருக்கு வரும் முதல் பேருந்து மெதுவாகத் தேநீர்க் கடை அருகே வந்து நின்றது. ஆட்டுக்குட்டியுடன் பேருந்தில் போகப்போவதை நினைத்து வள்ளிக்கு ஒரே மகிழ்ச்சி.

பேருந்து '...பாம்...பாம்' என்று ஒலி எழுப்பியது. ஆடு 'ம்மே... ம்மே....' என்று கத்தியது. "ஏய் மணி! கத்தாதே! நாம் வண்டியில் ஏறிப் போகப் போகிறோம்," என்றாள் வள்ளி.

மூவரும் பேருந்தின் அருகில் சென்றனர்.

"யாரது? ஆட்டுக்குட்டியை வண்டியில் ஏற்றுவது? இறங்கு! இறங்கு!,'' என்றார் நடத்துநர். ''அய்யா, வண்டியில் கூட்டமில்லையே, ஏற்றக் கூடாதா?," என்றார் வள்ளியின் தந்தை. "சரி சரி, ஓட்டுநரைக் கேட்டுப் பாருங்கள்."

திரும்பிப் பார்த்த ஓட்டுநர் "ஏற்றிக்கொள்ளுங்கள்," என்றார். மூவரும் வண்டியில் ஏறினர். பேருந்து விரைந்தது.



வண்டியின் குலுக்கலினாலும் சத்தத்தினாலும் ஆட்டுக்குட்டி மருண்டது.

'ம்மே... ம்மே...'

ஆட்டுக்குட்டி வள்ளியின் கையிலிருந்து துள்ளியோட முயன்றது. அருகில் வந்த நடத்துநர் ஆட்டுக்குட்டியின் தலையை மெதுவாகத் தடவினார். "எங்கே போக வேண்டும்?". "சந்தைக்கு", என்றார் வள்ளியின் தந்தை. வள்ளி ஆட்டுக்குட்டியின் கழுத்தில் கையை வளைத்து அணைத்துக் கொண்டாள். அது தன் முகத்தை அவளது முகத்தில் உரசியது.

“ஆட்டை என்னிடம் கொடு,” என்றார் அப்பா.

“வேண்டாம் அப்பா நானே வைத்துக் கொள்கிறேன்”

பேருந்து சந்தையின் அருகில் நின்றது.

“அப்பா, எதற்காக நாம் சந்தைக்குப் போகிறோம்?”

“ஆட்டுக்குட்டியை விற்க,” வள்ளி திடுக்கிட்டாள்.

“வேண்டாம் அப்பா, நான் என் மணியைத் தரமாட்டேன். மணி எனக்கு வேண்டும்,” என்றாள்.

‘‘திருவிழா வருகிறது. துணிமணி எடுக்க வேண்டும். செலவுக்குப் பணம் இல்லை. அதனால் ஆட்டுக்குட்டியை விற்கத்தான் வேண்டும்.”

“விக்க வேண்டாம்ப்பா.. வீட்டுக்குப் போவோம், வாங்க,” என்ற வள்ளியின் கண்களில் நீர் ததும்பியது.

பரபரப்பாக ஆட்டு வியாபாரம் நடந்து கொண்டிருந்த இடத்துக்குச் சென்றனர். வியாபாரியிடம் ஆட்டுக்குட்டியை விலை பேசினார் வள்ளியின் தந்தை.

“வள்ளி! ஆட்டுக் குட்டியைக் கொடு. இவரிடம் கொடுக்க வேண்டும்,” என்றார்.

“நான் தரமாட்டேன்... தரமாட்டேன்..” கண்ணீருடன் வள்ளி அழத் தொடங்கினாள்.

“உன்னைக் கூட்டி வந்தது தொந்தரவாகப் போயிற்றே,” என்றவாறு ஆட்டுக் குட்டியை ‘வெடுக்’ கெனப் பிடுங்கி வியாபாரியிடம் தந்தார். பணத்தைப் பெற்றுக் கொண்டார்.

ஆடு மிரண்டு ‘ம்மே... ம்மே...’ என்று கதறியது.

“வள்ளி... வா போகலாம்”

திரும்பித் திரும்பித் தன் ஆட்டுக்குட்டியைப் பார்த்தவாறே சென்றாள் வள்ளி.

“அங்கே பார்! குடைராட்டினம் சுற்றுகிறது. ஏறிப் பார்க்கிறாயா?”





"பொரி கடலை உனக்குப் பிடிக்குமே, வாங்கித் தரவா?"

பதில் இல்லை.

"உனக்குச் சட்டை வாங்கலாம், வா"

"வேண்டாம் அப்பா, வீட்டிற்கே போகலாம்."

இருவரும் அமைதியாக வீட்டிற்குத் திரும்பினர். வள்ளி வீட்டிற்குள் போகாமல் திண்ணையிலேயே உட்கார்ந்தாள். ஆட்டுக்குட்டி கட்டியிருந்த தூணில் கயிறு மட்டும் இருந்தது. அந்தக் கயிற்றையே பார்த்துக் கொண்டிருந்தாள்.



## பயிற்சிகள்

**அ) விடை தருக:**

1. வள்ளியும் தந்தையும் பேருந்திற்காக எந்த இடத்தில் காத்திருந்தனர்?
2. வள்ளியும் அவளுடைய தந்தையும் எங்கே சென்றனர்?
3. ஆட்டுக்குட்டியின் பெயர் என்ன?
4. வள்ளியின் தந்தை, ஆட்டுக்குட்டியை விற்க என்ன காரணம் கூறினார்?
5. வள்ளி சந்தையில் தனக்கு எதுவும் வேண்டாம் என ஏன் கூறினாள்?

**ஆ) பிரித்து எழுதுக:**

- பிடித்திருந்தாள் = ________________
- அழத் தொடங்கினாள் = ________________
- யாரது = ________________
- கூட்டமில்லை = ________________
- துள்ளியோட = ________________

**இ) அகராதியைப் பார்த்துப் பொருள் எழுதுக:**



**தொந்தரவு** - ________________

**மருட்சி** - ________________

**ஈ) பேச்சும் எழுத்தும்:**

| பேச்சு வழக்கு | | எழுத்து வழக்கு |
|---|---|---|
| விக்க | | <u>விற்க</u> |
| வேண்டாம்ப்பா | - | ________________ |
| ________________ | - | ________________ |
| ________________ | - | ________________ |
| ________________ | - | ________________ |

**உ) த, தா, தி... வரிசையில் எழுதுக:**

தேன், தோரணம், தீமை, தூண்டில், திங்கள், தென்றல், தட்டு, தையல், தொட்டி, துயில், தாமரை.

| | | |
|---|---|---|
| 1. ____________ | 5. ____________ | 9. ____________ |
| 2. ____________ | 6. ____________ | 10. ____________ |
| 3. ____________ | 7. ____________ | 11. ____________ |
| 4. ____________ | 8. ____________ | |

**ஊ) என்ன பேசியிருக்கும்?**

வள்ளியின் தந்தை விற்றபோது ஆட்டுக்குட்டி .........

## ஏ) யார்? என்ன? எதை?

✣ வள்ளி ஆட்டுக்குட்டியைத் தூக்கினாள்.
✣ பறவை கூடு கட்டியது.
✣ குரங்கு வாழைப்பழத்தைத் தின்றது.
✣ இளங்கோ கூடை பின்னினான்.
✣ பாலன் படத்தை வரைந்தான்.
✣ மாலா தோசை சுட்டாள்.
✣ சையது சட்டை தைத்தார்.
✣ அப்பா செய்தித்தாள் படித்தார்.
✣ வேலன் பொம்மை விற்றான்.
✣ கண்ணன் மீன் பிடித்தான்.

1. இளங்கோ எதைப் பின்னினான்? ____________________
2. பாலன் எதை வரைந்தான்? ____________________
3. மாலா என்ன செய்தாள்? ____________________
4. பொம்மை விற்றவர் யார்? ____________________
5. அப்பா எதைப் படித்தார்? ____________________
6. எது கூடு கட்டியது? ____________________
7. ____________________ ? ____________________
8. ____________________ ? ____________________
9. ____________________ ? ____________________
10. ____________________ ? ____________________

## ஏ) காலி இடத்தை நிரப்புக:

நேற்று நான் ஒரு ________ பார்த்தேன். அது ஒரு ________ அமர்ந்திருந்தது. என்னைப் பார்த்து அது, ''எங்கே போகிறாய்?'' என்று கேட்டது. நான் ________ போய்க் கொண்டிருக்கிறேன்,'' என்று சொன்னேன். உடனே அது. "நாம் சேர்ந்து போவோமா?" என்று கேட்டது.

வழியில் நாங்கள் ________ பார்த்தோம். நான் ..........

**தொடர்ந்து எழுதி ஒரு கதையை உருவாக்குக.**

## ஐ) குறுக்கெழுத்துப் புதிர்:

குறிப்புகளைப் பயன்படுத்திக் கட்டங்களை நிரப்புக.

**இடமிருந்து வலமாக (➔)**

1. பொங்கலுக்குப் புதிதாக ...
   செய்த நெல்லைப் பயன்படுத்துவர். (4)
5. இந்த மாதம் முடிந்தவுடன்
   பொங்கல் கொண்டாடுவர். (4)
6. இதைப் பின்னல் என்றும் கூறுவர். (2)
7. பெண்கள் முகத்தில் பூசுவதும்
   இதுதான். பொங்கல் பானையில்
   கட்டுவதும் இதுதான். (4)
9. இதை ஒழிக்கப் பொறி வைத்துப்
   பிடிப்பர். (2)
10. பாம்பு இதற்குள் இருக்கும் (3)
13. இது தின்னக் கூலியா? (4)
15. இதைக் கண்டால் பனி விலகும். (4)
16. தண்டனை பெற்றுச் சிறைக்குள் இருப்பவர். (2)

| 1 | | 2 | | ■ | 3 | ■ | 4 |
|---|---|---|---|---|---|---|---|
| | ■ | | ■ | 5 | | | |
| 6 | | ■ | ■ | | ■ | ■ | ■ |
| 7 | | 8 | | ■ | ■ | 9 | |
| | ■ | | ■ | 10 | | | ■ |
| | ■ | | 11 | ■ | ■ | | ■ |
| ■ | 12 | ■ | 13 | | | 14 | ■ |
| 15 | | | | ■ | ■ | 16 | |

**மேலிருந்து கீழாக (🡻)**

1. மரங்களுக்கெல்லாம் அரசன். (6)
2. மீன் பிடிக்க உதவுவது. (2)
3. உழவுக்கருவி. (2)
4. வீட்டில் வளர்க்கப்படும் இப்பறவை முட்டையிடும். (2)
5. உழவனின் நண்பன். பொங்கலுக்கு அடுத்த நாள்
   சிறப்பிக்கப்படும் விலங்கு. (2)
8. கடலிலிருந்து கிடைக்கும் இதை ஊதினால் ஒலி எழும். (3)
9. இனிப்புள்ள இடத்தைத் தேடிச் செல்லும். (4)
11. மயிலுக்குப் போர்வை தந்தவன். (3)
12. தந்திரம் மிக்க விலங்கு. (2)
14. நெருப்பிலிருந்து தோன்றும் இது கண்ணைக் கசக்க
    வைத்துவிடும். (2)

#  செய்யுள்

## 1. திருக்குறள்

1. செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
   செல்வத்துள் எல்லாம் தலை.
2. சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
   சொல்லிற் பயன்இலாச் சொல்.
3. இனிய உளவாக இன்னாத கூறல்
   கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.
4. எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
   கண்ணென்ப வாழும் உயிர்க்கு.
5. எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
   மெய்ப்பொருள் காண்பது அறிவு.
6. எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
   பொய்யா விளக்கே விளக்கு.
7. தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்
   தோன்றலின் தோன்றாமை நன்று.
8. அஞ்சுவது அஞ்சாமை பேதைமை அஞ்சுவது
   அஞ்சல் அறிவார் தொழில்.
9. தீயவை தீய பயத்தலான் தீயவை
   தீயினும் அஞ்சப் படும்.
10. ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
    உயிரினும் ஓம்பப் படும்.

**– திருவள்ளுவர்**

**அ) சொல்லும் பொருளும்:**

| | | |
|---|---|---|
| மெய்ப்பொருள் | - | உண்மைப் பொருள் |
| சான்றோர் | - | அறிவிற்சிறந்தவர் |
| பொய்யா | - | தவறாத |
| ஓம்பப்படும் | - | பாதுகாக்கப்படும். |
| அஞ்சாமை | - | பயப்படாதிருத்தல் |
| பயத்தலான் | - | அளிப்பதால் |
| பேதைமை | - | அறிவின்மை |

**ஆ) 'மை' என்று முடியும் சொற்களை எழுதுக:**

(எ-டு) நன்மை

_________________ _________________

_________________ _________________

_________________ _________________

**இ) கட்டங்களில் உள்ள எழுத்துகள் வருமாறு சொற்களை எழுதுக:**

| | | | | |
|---|---|---|---|---|
| | செ | ங் | க | ல் |
| | வி | | | |
| | ச் | | | |
| | செ | | | |
| | ல் | | | |
| | வ | | | |
| | ம் | | | |

**ஈ) விடை தருக:**

1. கனி போன்றவை எவை? காய் போன்றவை எவை?
2. 'தீயவை தீயினும் அஞ்சப்படும்' ஏன்?
3. 'கண் எனத் தகும்' எவை?
4. சான்றோர் போற்றும் விளக்கு எது?
5. உயிரைக் காட்டிலும் சிறந்தது எது?

# 2. மூதுரை

1. நன்றி ஒருவர்க்குச் செய்தக்கால் அந்நன்றி
'என்றுதருங்கொல்?' எனவேண்டா - நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்தருத லால்..

**சொல்லும் பொருளும்:**

நின்று - **நிலைபெற்று**
தளரா - **சோர்வு அடையாமல்**
தெங்கு - **தென்னை**

2. நெல்லுக்கு இறைத்தநீர் வாய்க்கால் வழிஓடிப்
புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம் - தொல் உலகில்
நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு
எல்லார்க்கும் பெய்யும் மழை.

பொசியும் - **கசியும்**
தொல் உலகு - **பழமையான உலகு**

3. கான மயில்ஆடக் கண்டிருந்த வான்கோழி
தானும் அதுவாகப் பாவித்துத் - தானும்தன்
பொல்லாச் சிறகைவிரித்து ஆடினாற் போலுமே
கல்லாதான் கற்ற கவி.

கானம் - **காடு**
கவி - **பாடல்**

**– ஔவையார்**

**அ) விடை தருக:**

1. உதவி பெறுபவர் எதைப் போல் இருக்கவேண்டும்?
2. நெல்லுக்கு நீர் எதன் வழியாகப் பாய்கிறது?
3. நெல்லுக்கு இறைத்த நீர் வேறு எதற்கும் பாய்கிறது என மூதுரை கூறுகிறது?
4. வான்கோழி எதைப் போல் ஆடியது?
5. வான்கோழி எவ்வாறு ஆடியது?

**ஆ) முதல் எழுத்தை மாற்றிப் புதிய சொற்களை எழுதுக:**

| | | | | |
|---|---|---|---|---|
| செடி | படை | வான் | கலை | ______ |
| படி | ______ | ______ | ______ | ______ |
| ______ | ______ | ______ | ______ | ______ |
| ______ | ______ | ______ | ______ | ______ |

# 3. நாலடியார்

1. கல்வி கரையில; கற்பவர் நாள்சில;
   மெல்ல நினைக்கின் பிணிபல; - தெள்ளிதின்
   ஆராய்ந்து அமைவுடைய கற்பவே, நீரொழியப்
   பாலுண் குருகின் தெரிந்து.

2. இம்மை பயக்குமால்; ஈயக் குறைவின்றால்;
   தம்மை விளக்குமால்; தாம்உளராக் கேடின்றால்;
   எம்மை உலகத்தும் யாம்காணேம்; கல்விபோல்
   மம்மர் அறுக்கும் மருந்து.

3. வேம்பின் இலையுள் கனியினும் வாழைதன்
   தீஞ்சுவை யாதும் திரியாதாம் - ஆங்கே
   இனம்தீது எனினும் இயல்புடையார் கேண்மை
   மனம்தீதாம் பக்கம் அரிது.

**– சமண முனிவர்கள்**

**சொல்லும் பொருளும்:**

கரையில - **எல்லை இல்லை**
பிணி - **நோய்**
ஆராய்ந்து - **ஆராய்ச்சி செய்து**
தெள்ளிதின் - **தெளிவாக**
அமைவுடைய - **தகுதியுடைய**
குருகு - **அன்னம்**

பயக்கும் - **பயன் தரும்**
இம்மை - **இப்பிறப்பு**
ஈய - **கொடுக்க**
கேடு - **துன்பம், அழிதல்**
எம்மை - **எந்த**
மம்மர் - **அறியாமை**

தீஞ்சுவை - **இனிய சுவை**
திரியாதாம் - **மாறாது**
இயல்புடையார் - **நல்லறிவுடையோர்**
கேண்மை - **நட்பு**

**அ) விடை தருக:**

1. எப்படிப்பட்ட நூல்களைப் படிக்க வேண்டும் என்று நாலடியார் கூறுகிறது?
2. அறியாமையை நீக்கும் மருந்து எது?
3. உயர்ந்தோர் நட்பின் பயன் யாது?

**ஆ) சரியான சொல்லை எடுத்துச் சொற்றொடரை முழுமையாக்கு:**

- எளியவர்களைக் கண்டு மனம் ________ (இறங்கு, இரங்கு)
  மரத்திலிருந்து கீழே ________
- தீய செயல்களை ________ (விலக்கு, விளக்கு)
  பாடலின் பொருளைத் தெளிவாக ________
- அன்பில் மலர்வது ________ (மணம், மனம்)
  மல்லிகை தருவது நல்ல ________

**இ) கட்டத்தில் உள்ள எழுத்துகளைப் பயன்படுத்திச் சொற்களை உருவாக்குக:**

அவற்றிலிருந்து பெயரைக் குறிக்கும் சொற்களையும் செயலைக் குறிக்கும் சொற்களையும் பட்டியலிடுக.

| செ | ல் | வ | ம் |
|---|---|---|---|
| எ | ழு | த் | து |
| வி | ள | க் | கு |
| கு | ர | ங் | கு |

**சொற்கள்:**

________________ ________________

________________ ________________

________________ ________________

________________ ________________

________________ ________________

| பெயரைக் குறிக்கும் சொற்கள் | செயலைக் குறிக்கும் சொற்கள் |
|---|---|
| (எ-டு) குளம் | (எ-டு) செல் |
| ________________ | ________________ |
| ________________ | ________________ |
| ________________ | ________________ |
| ________________ | ________________ |
| ________________ | ________________ |

# 4. கத்தியின்றி ரத்தமின்றி

கத்தியின்றி ரத்தமின்றி
யுத்தமொன்று வருகுது
சத்தியத்தின் நித்தியத்தை
நம்பும் யாரும் சேருவீர்!

கண்ட தில்லை கேட்ட தில்லை
சண்டை இந்த மாதிரி
பண்டு செய்த புண்ணியந்தான்
பலித்ததே நாம் பார்த்திட

காந்தி யென்ற சாந்த மூர்த்தி
தேர்ந்து காட்டும் செந்நெறி
மாந்த ருக்குள் தீமைகுன்ற
வாய்த்த தெய்வ மார்க்கமே.

**– நாமக்கல் கவிஞர் இராமலிங்கம்**

**சொல்லும் பொருளும்:**

சத்தியம் - **உண்மை**
பண்டு - **முற்காலம்**
பலித்தது - **நிறைவேறியது**
சாந்தம் - **அமைதி**
மார்க்கம் - **வழி**

**அ) விடை தருக:**

1. நாமக்கல் கவிஞர் கூறும் யுத்தம் எத்தகையது?
2. காந்தியின் வழி எது?

**ஆ) நூல்களைக் கண்டுபிடி! விரும்பிப் படி!** **சுழல் சதுரம்**

| தி | த் | ஆ | ரை | து |
|---|---|---|---|---|
| ரு | தி | ப | ழி | மூ |
| க் | கூ | டி | வ | ர் |
| கு | டி | ந | ல் | யா |
| ற | ள் | நா | ல | டி |

# 5. அழகின் சிரிப்பு

**குரங்கின் அச்சம்**

கிளையினிற் பாம்பு தொங்க
விழுதென்று குரங்கு தொட்டு
விளக்கினைத் தொட்ட பிள்ளை
வெடுக்கெனக் குதித்ததைப் போல்
கிளைதோறும் குதித்துத் தாவிக்
கீழுள்ள விழுதை யெல்லாம்
ஒளிப்பாம்பாய் எண்ணி எண்ணி
உச்சிபோய்த் தன்வால் பார்க்கும்.

**– பாவேந்தர் பாரதிதாசன்**

**அ) விடை தருக:**

1. குரங்கு விழுதென்று எதனைத் தொட்டது?
2. பிள்ளை வெடுக்கெனக் குதித்தது எதனால்?
3. குரங்கு தன் வாலை என்னவாக நினைத்தது?

**ஆ) பொருத்துக:**

- திருக்குறள் - சமண முனிவர்கள்.
- மூதுரை - பாரதிதாசன்
- நாலடியார் - திருவள்ளுவர்
- அழகின் சிரிப்பு - ஔவையார்.

**இ) 'பா' என்று தொடங்கும் சொற்களை எழுதுக:**

(எ-டு) பால்
பாடல்

# அகரவரிசைச் சொல்—பொருள் விளக்கம்

அகப்பட்டு - பிடிபட்டு
அச்சம் - பயம்
அஞ்சாது - பயப்படாது
அணிந்து - உடுத்தி
அதிசயம் - புதுமை
அதிர்ச்சி - திடுக்கிடல்
அரிது - கடினம்
அருமை - எளிதில் கிடைக்காத
அலைக்கழித்தல்- அங்குமிங்கும் அலையச் செய்தல்
அவசரம் - விரைவு
அவலம் - வருந்தத்தக்க நிலை
அற்புதம் - வியப்பைத் தருவது
அறிக்கை - நிகழ்ச்சிகளின் தொகுப்பு
அறிவுரை - நல்வழிப்படுத்த வழங்கும் கருத்து
அறுவடை - கதிர் அறுத்தல்
அன்றோ - அல்லவோ
ஆசிரமம் - முனிவர்கள் வாழும் இடம்
ஆணை - கட்டளை
ஆரவாரம் - பெரும் சத்தம்
இதழ் - பத்திரிக்கை
இரக்கம் - கருணை

இல்லம் - வீடு
இறைத்தல் - சிதறுதல்
உதித்தல் - தோன்றுதல்
உலா - சுற்றி வருதல்
உவகை - மகிழ்ச்சி
உறக்கம் - தூக்கம்
உன்னதம் - உயர்வு
எழுச்சி - தோற்றம்
ஏற்றம் - உயர்வு
ஒப்பந்தம் - உடன்படிக்கை
கதிரவன் - சூரியன்
கலம் - கப்பல்
கவலை - வருத்தம்
கனி - பழம்
கூச்சல் - உரத்த குரல் ஒலி
கேணி - கிணறு
சரக்கு - பொருள்
சாக்கு - கோணிப்பை
சாதனம் - கருவி
சாதனை - அரிய செயல்
சிப்பாய் - போர்வீரர்
சீருடை - ஓரேவண்ண உடை
சுவரொட்டி- சுவரில் ஒட்டப்படும் விளம்பரத் தாள்
செங்கதிர் - சூரியன்
செந்நெறி - நல்வழி

தடுத்தல் - காத்தல்
தணிந்தது - குறைந்தது தீர்ந்தது
தரம் - தகுதி
தவித்தது - வருந்தியது
திட்டம் - ஏற்பாடு
திண்டாட்டம்- தவிப்பு
திரள் - கூட்டம்
தீங்கு - தீமை
தீர்ப்பு - முடிவு
துதி - வழிபாடு
துயில் - உறக்கம்
துவாரம் - துளை
தொந்தரவு - தொல்லை
நலம் - சுகம்
நாட்குறிப்பு - நாள்தோறும் எழுதும் நிகழ்ச்சிக் குறிப்பு
நானிலம் - உலகம்
நித்தியம் - அழிவில்லாமை
நிருபர் - பத்திரிகைகளுக்குச் செய்தி சேகரிப்பவர்
நிறைவு - முடிவு
நெரிசல் - கூட்ட மிகுதி
நொந்து - வருந்தி
படை - போர்ப்படை
பண் - பாடல்
பணி - வேலை
பந்தயம் - போட்டி
பாவித்து - கற்பனையாக
புதுமை - இதுவரை இல்லாதது
புழுதி - மண் துகள்
பொல்லாத - தீய
மருட்சி - மிரளுதல்
மாந்தர் - மனிதர்
மாய்ந்தது - இறந்தது
முறைப்பு - கோபப்பார்வை
முன்னிரவு - இரவின் முற்பகுதி
மெலிதல் - இளைத்தல்
யுத்தம் - போர்
வண்ணம் - நிறம்
வலம்புரி - சங்கினத்தில் உயர்ந்தது
வலிந்து - கட்டாயமாக
வலிமை - பலம்
வாடி இருத்தல் - சோர்ந்து இருத்தல்
விசைப்படகு - எந்திரப் படகு
விநோதம் - புதுமை
வியப்பு - ஆச்சரியம்
வெறிச்சோடிய - ஆள்நடமாட்டம் இல்லாத
வேடிக்கை - விளையாட்டு
வேம்பு - வேப்பமரம்
வைகறை - விடியற்காலை

# திறன்களின் தொகுப்பு

## 1. சொர்க்கத்தில் நரி

அறிமுகமில்லாத சூழலில் உரையாடல்களையும் வசனங்களையும் கேட்டுப் புரிந்து கொள்ளுதல்.
அறிமுகமான சூழலில் எளிய உரைகளைக் கேட்டுப் புரிந்து கொள்ளும் திறன்
இடைநிறுத்தமின்றி இயல்பாகத் தொடர்ந்து பேசுதல்
எளிய பாலர் அகராதிகளைப் பயன்படுத்துதல்
வாக்கிய அமைப்பின் எளிய செய்முறை விதிகளைப் புரிந்து கொள்ளுதல்
தொடர் வாய்மொழிக் கூற்றுகளைக் கேட்டறிந்து அதற்கேற்பச் செயல்படல்
தெளிவாகவும் ஒழுங்காகவும் எழுதுதல்
குழந்தைகள், பாலர் இதழ்களைப் படித்தல்

## 2. சட்டை போட்ட குரங்கு

அறிமுகமில்லாத சூழலில் உரையாடல்களையும் வசனங்களையும் கேட்டுப் புரிந்து கொள்ளுதல்.
இடைநிறுத்தமின்றி இயல்பாகத் தொடர்ந்து பேசுதல்
வாய்மொழி எழுத்து உரையில் கருத்துக்கும் நிகழ்வுக்கும் காரண காரியத் தொடர்பைக் கண்டு உணர்ந்து உரைக்கும் திறன்.
எளிய ஒலி நிறுத்தற் குறிகளுடன் கூடிய சொல்லைக் கேட்டு எழுதுதல்
வழிகாட்டலுடன் பத்தியிட்டு, ஒலி நிறுத்தக் குறியீடுகளுடன் கட்டுரை எழுதுதல்
அறிமுகமில்லாத பொருள்கள் பற்றி விவரிக்கும் திறன்
எளிய பாலர் அகராதிகளைப் பயன்படுத்துதல்
தொடர் வாய்மொழிக் கூற்றுகளைக் கேட்டறிந்து அதற்கேற்பச் செயல்படல்

## 3. வீதி உலா

இடைநிறுத்தமின்றி இயல்பாகத் தொடர்ந்து பேசுதல்
எளிய பாலர் அகராதிகளைப் பயன்படுத்துதல்
தொடர் வாய்மொழிக் கூற்றுகளைக் கேட்டறிந்து அதற்கேற்பச் செயல்படல்
நகைச்சுவைத் துணுக்குகளையும் சுவரொட்டிகளையும் படித்தல்
தெளிவாகவும் ஒழுங்காகவும் எழுதுதல்

## 4. பார்க்கும் இடமெல்லாம்...

நகைச்சுவைத் துணுக்குகளையும் சுவரொட்டிகளையும் படித்தல்
அறிமுகமில்லாத பொருள்கள் பற்றி விவரிக்கும் திறன்
இடைநிறுத்தமின்றி இயல்பாகத் தொடர்ந்து பேசுதல்
தெளிவாகவும் ஒழுங்காகவும் எழுதுதல்
வாக்கிய அமைப்பின் எளிய செய்முறை விதிகளைப் புரிந்து கொள்ளுதல்
வழிகாட்டலுடன் பத்தியிட்டு, ஒலி நிறுத்தக் குறியீடுகளுடன் கட்டுரை எழுதுதல்
எளிய பாலர் அகராதிகளைப் பயன்படுத்துதல்

## 5. பொழுது விடிவது யாராலே?

அறிமுகமில்லாத சூழலில் உரையாடல்களையும் வசனங்களையும் கேட்டுப் புரிந்து கொள்ளுதல். வாக்கிய அமைப்பின் எளிய செய்முறை விதிகளைப் புரிந்து கொள்ளுதல்

எளிய ஒலி நிறுத்தற் குறிகளுடன் கூடிய சொல்லைக் கேட்டு எழுதுதல்

எளிய பாலர் அகராதிகளைப் பயன்படுத்துதல்

வழிகாட்டலுடன் பத்தியிட்டு, ஒலி நிறுத்தக் குறியீடுகளுடன் கட்டுரை எழுதுதல்

இடைநிறுத்தமின்றி இயல்பாகத் தொடர்ந்து பேசுதல்

ஏறக்குறைய 4000 சொற்களைப் படித்தறிந்து புரிந்து பயன்படுத்தும் சொல்லாட்சித் திறன்

குழந்தைகள், பாலர் இதழ்களைப் படித்தல்

## 6. முரசு

தெளிவாகப் பொருள் விளங்க ஒப்புவித்தல்

ஏறக்குறைய 4000 சொற்களைப் படித்தறிந்து புரிந்து பயன்படுத்தும் சொல்லாட்சித் திறன்

வாய்மொழி எழுத்து உரையில் கருத்துக்கும் நிகழ்வுக்கும் காரண காரியத் தொடர்பைக் கண்டு உணர்ந்து உரைக்கும் திறன்

எளிய பாலர் அகராதியைப் பயன்படுத்துதல்

தொடர் வாய்மொழிக் கூற்றுகளைக் கேட்டறிந்து அதற்கேற்பச் செயல்படல்

தெளிவாகவும் ஒழுங்காகவும் எழுதுதல்

## 7. வீட்டை எரித்த விளக்கு

பேச்சு வழக்கிற்கும் எழுத்து வழக்கிற்கும் உள்ளவேறுபாட்டைக் கற்றறிதல்

அறிமுகமில்லாத சூழலில் உரையாடல்களையும் வசனங்களையும் கேட்டுப் புரிந்து கொள்ளுதல்

வாய்மொழி எழுத்து உரையில் கருத்துக்கும் நிகழ்வுக்கும் காரண காரியத் தொடர்பைக் கண்டு உணர்ந்து உரைக்கும் திறன்

அறிமுகமில்லாத பொருள்கள் பற்றி விவரிக்கும் திறன்

வழிகாட்டலுடன் பத்தியிட்டு, ஒலி நிறுத்தக் குறியீடுகளுடன் கட்டுரை எழுதுதல்

ஏறக்குறைய 4000 சொற்களைப் படித்தறிந்து புரிந்து பயன்படுத்தும் சொல்லாட்சித் திறன்

எளிய பாலர் அகராதிகளைப் பயன்படுத்துதல்

இடைநிறுத்தமின்றி இயல்பாகத் தொடர்ந்து பேசுதல்

## 8. செய்திகள் அறிவோமா

நகைச்சுவைத் துணுக்குகளையும் சுவரொட்டிகளையும் படித்தல்

ஏறக்குறைய 4000 சொற்களைப் படித்தறிந்து புரிந்து பயன்படுத்தும் சொல்லாட்சித் திறன்

எளிய பாலர் அகராதிகளைப் பயன்படுத்துதல்

வழிகாட்டலுடன் பத்தியிட்டு, ஒலி நிறுத்தக் குறியீடுகளுடன் கட்டுரை எழுதுதல்

தெளிவாகவும் ஒழுங்காகவும் எழுதுதல்

தொடர் வாய்மொழிக் கூற்றுகளைக் கேட்டறிந்து அதற்கேற்பச் செயல்படல்

## 9. பணமிருந்தும் பட்டினி

உரைநடைப் பகுதியைப் படித்த - கேட்ட பின் ஏனெனில் எனவே என்பன உள்ளடக்கிய வினாக்களுக்கு விடை தருதல்
எளிய ஒலி நிறுத்தற் குறிகளுடன் கூடிய சொல்லைக் கேட்டு எழுதுதல்
வாக்கிய அமைப்பின் எளிய செய்முறை விதிகளைப் புரிந்து கொள்ளுதல்
எளிய பாலர் அகராதிகளைப் பயன்படுத்துதல்
ஏறக்குறைய 4000 சொற்களைப் படித்தறிந்து புரிந்து பயன்படுத்தும் சொல்லாட்சித் திறன்
தொடர் வாய்மொழிக் கூற்றுகளைக் கேட்டறிந்து அதற்கேற்பச் செயல்படல்
குழந்தைகள், பாலர் இதழ்களைப் படித்தல்

## 10. என்ன செய்வேன்?

அறிமுகமில்லாத பொருள்கள் பற்றி விவரிக்கும் திறன்
எளிய ஒலி நிறுத்தற் குறிகளுடன் கூடிய சொல்லைக் கேட்டு எழுதுதல்
இடைநிறுத்தமின்றி இயல்பாகத் தொடர்ந்து பேசுதல்
வழிகாட்டலுடன் பத்தியிட்டு, ஒலி நிறுத்தக் குறியீடுகளுடன் கட்டுரை எழுதுதல்
எளிய பாலர் அகராதிகளைப் பயன்படுத்துதல்
ஏறக்குறைய 4000 சொற்களைப் படித்தறிந்து புரிந்து பயன்படுத்தும் சொல்லாட்சித் திறன்

## 11. நண்பனைத் தேடி ...

**குழந்தைகள்** பாலர் இதழ்களைப் படித்தல்
அறிமுகமில்லாத சூழலில் உரையாடல்களையும் வசனங்களையும் கேட்டுப் புரிந்து கொள்ளுதல்
இடைநிறுத்தமின்றி இயல்பாகத் தொடர்ந்து பேசுதல்
எளிய வகுப்பறை விவாதங்கள்
வாக்கிய அமைப்பின் எளிய செய்முறை விதிகளைப் புரிந்து கொள்ளுதல்
வழிகாட்டலுடன் பத்தியிட்டு, ஒலி நிறுத்தக் குறியீடுகளுடன் கட்டுரை எழுதுதல்

## 12. வாழவிடு! வாழு!

அறிமுகமான சூழலில் எளிய உரைகளைக் கேட்டுப் புரிந்து கொள்ளும் திறன்
பேச்சு வழக்கிற்கும் எழுத்து வழக்கிற்கும் உள்ள வேறுபாட்டைக் கற்றறிதல்
ஏறக்குறைய 4000 சொற்களைப் படித்தறிந்து புரிந்து பயன்படுத்தும் சொல்லாட்சித் திறன்
எளிய பாலர் அகராதிகளைப் பயன்படுத்துதல்
வாக்கிய அமைப்பின் எளிய செய்முறை விதிகளைப் புரிந்து கொள்ளுதல்
எளிய வகுப்பறை விவாதங்கள்
இடைநிறுத்தமின்றி இயல்பாகத் தொடர்ந்து பேசுதல்
வழிகாட்டலுடன் பத்தியிட்டு, ஒலி நிறுத்தக் குறியீடுகளுடன் கட்டுரை எழுதுதல்

## 13. மணியான பரிசு

கையெழுத்துக் கடிதங்களைப் படிக்கும் திறன்
வாக்கிய அமைப்பின் எளிய செய்முறை விதிகளைப் புரிந்து கொள்ளுதல்
ஏறக்குறைய 4000 சொற்களைப் படித்தறிந்து புரிந்து பயன்படுத்தும் சொல்லாட்சித் திறன்
எளிய பாலர் அகராதிகளைப் பயன்படுத்துதல்

உரைநடைப் பகுதியைப் படித்த-கேட்ட பின் ஏனெனில் எனவே என்பன உள்ளடக்கிய வினாக்களுக்கு விடை தருதல்
தொடர் வாய்மொழிக் கூற்றுகளைக் கேட்டறிந்து அதற்கேற்ப செயல்படல்
தெளிவாகவும் ஒழுங்காகவும் எழுதுதல்
எளிய ஒலி நிறுத்தற் குறிகளுடன் கூடிய சொல்லைக் கேட்டு எழுதுதல்

## 14. காண்போம் கன்னியாகுமரி!

ஏறக்குறைய 4000 சொற்களைப் படித்தறிந்து புரிந்து பயன்படுத்தும் சொல்லாட்சித் திறன்
எளிய பாலர் அகராதிகளைப் பயன்படுத்துதல்
வாக்கிய அமைப்பின் எளிய செய்முறை விதிகளைப் புரிந்து கொள்ளுதல்
தொடர் வாய்மொழிக் கூற்றுகளைக் கேட்டறிந்து அதற்கேற்ப செயல்படல்
உரைநடைப் பகுதியைப் படித்த -கேட்ட பின் ஏனெனில் எனவே என்பன உள்ளடக்கிய வினாக்களுக்கு விடை தருதல்

## 15. மீனாவின் வாழ்வில் ஒருநாள்...

கையெழுத்துக் கடிதங்களைப் படிக்கும் திறன்
பேச்சு வழக்கிற்கும் எழுத்து வழக்கிற்கும் உள்ள வேறுபாட்டைக் கற்றறிதல்
வழிகாட்டலுடன் பத்தியிட்டு, ஒலி நிறுத்தக் குறியீடுகளுடன் கட்டுரை எழுதுதல்
எளிய பாலர் அகராதிகளைப் பயன்படுத்துதல்
உரைநடைப் பகுதியைப் படித்த-கேட்ட பின் ஏனெனில் எனவே என்பன உள்ளடக்கிய வினாக்களுக்கு விடை தருதல்
ஏறக்குறைய 4000 சொற்களைப் படித்தறிந்து புரிந்து பயன்படுத்தும் சொல்லாட்சித் திறன்
தெளிவாகவும் ஒழுங்காகவும் எழுதுதல்

## 16. குறிப்பால் அறியலாம்!

குழந்தைகள், பாலர் இதழ்களைப் படித்தல்
ஏறக்குறைய 4000 சொற்களைப் படித்தறிந்து புரிந்து பயன்படுத்தும் சொல்லாட்சித் திறன்
எளிய பாலர் அகராதிகளைப் பயன்படுத்துதல்
தெளிவாகவும் ஒழுங்காகவும் எழுதுதல்

## 17. வெற்றுத் திண்ணை

அறிமுகமான சூழலில் எளிய உரைகளைக் கேட்டுப் புரிந்து கொள்ளும் திறன்
பேச்சு வழக்கிற்கும் எழுத்து வழக்கிற்கும் உள்ள வேறுபாட்டைக் கற்றறிதல்
இடைநிறுத்தமின்றி இயல்பாகத் தொடர்ந்து பேசுதல்
எளிய பாலர் அகராதிகளைப் பயன்படுத்துதல்
வாக்கிய அமைப்பின் எளிய செய்முறை விதிகளைப் புரிந்து கொள்ளுதல்
ஏறக்குறைய 4000 சொற்களைப் படித்தறிந்து புரிந்து பயன்படுத்தும்
சொல்லாட்சித் திறன்
குழந்தைகள், பாலர் இதழ்களைப் படித்தல்
வழிகாட்டலுடன் பத்தியிட்டு, ஒலி நிறுத்தக் குறியீடுகளுடன் கட்டுரை எழுதுதல்

## செய்யுள்

தெளிவாகப் பொருள் விளங்க ஒப்புவித்தல்
ஏறக்குறைய 4000 சொற்களைப் படித்தறிந்து புரிந்து பயன்படுத்தும் சொல்லாட்சித் திறன்



தமிழ்நாடு
ஆந்திரப் பிரதேசம்
திருவள்ளூர்
சென்னை
வேலூர்
காஞ்சிபுரம்
கர்நாடகம்
கிருஷ்ணகிரி
திருவண்ணாமலை
தர்மபுரி
விழுப்புரம்
பாண்டிச்சேரி
(புதுச்சேரி)
சேலம்
கடலூர்
நீலகிரி
ஈரோடு
நாமக்கல்
பெரம்பலூர்
நாகப்பட்டினம்
கோயம்புத்தூர்
திருச்சிராப்பள்ளி
காரைக்கால்
(பாண்டிச்சேரி)
கரூர்
தஞ்சாவூர்
திருவாரூர்
தமிழ் நாடு
கேரளம்
திண்டுக்கல்
புதுக்கோட்டை
நாகப்பட்டினம்
தேனி
மதுரை
சிவகங்கை
விருதுநகர்
இராமநாதபுரம்
தூத்துக்குடி
திருநெல்வேலி
இலங்கை
கன்னியாகுமரி